25

# இருக்கும் வரை இறைவனையே பாடிய இசைக்கவிஞனின் கதை




இசை: மரகதமணி ஒளிப்பதிவு: வின்சென்ட் வசனம் பாடல்கள்: K. தேவநாராயணன்

DOLBY STEREO SR

VMC PRODUCTIONS, 14, GOPAL KRISHNA ROAD, T. NAGAR, CHENNAI-600 017. PHONES: 828 1776, 823 7056.

PYRAMID

இப்படத்தின் பாடல் கேசட்கள் ஏற்கனவே பிரமிட் ஆடியோ மூலம் விற்பனையில் உள்ளன!

# திஸ் இஸ் டூ மச்!

பொங்கலுக்கு ரிலீஸ் ஆகப் போகிற படங்கள் மொத்தம் எத்தனை என்று இப்போது உறுதியாகத் தெரியாது. தெரிந்தவற்றுள் முக்கியமானவை – கமலின் 'காதலா காதலா', சுந்தர். சியின் 'நாமிருவர் நமக்கிருவர்'.

இந்த இரண்டு படங்களுக்கும் இரண்டு ஒற்றுமை. இரண்டிலும் பிரபு தேவா நடிக்கிறார் என்பது ஒன்று – எல்லாருக்கும் தெரிந்தது.

யாருக்கும் தெரியாதது – இரண்டுமே ஒரே கதை!

அதாகப்பட்டது, இரண்டுமே 'Two much' என்ற ஆங்கிலப் படத்தின் தழுவல் அல்லது உல்டா அல்லது ஜெராக்ஸ் அல்லது காப்பி:

மிஸஸ் டவுட்ஃபயரை அவ்வை சண்முகி ஆக்கி, அதையே ஸ்திரீ – 420 ஆக கமல் இந்தியிலும் தரவிருப்பது தெரிந்ததே. அங்கே அவருக்குப் போட்டி





# “வெள்ளைக் கொடிதான் வேணும்!”

கல்கி 16.11.97-ல் வெளியான 'வெள்ளோட்டம் பார்க்கும் வெள்ளைக் கொடி ஆட்டோக்கள்...' நடைமுறையில் ஓடத் துவங்கி விட்டன.

“மீட்டர் கட்டணம் மட்டும்” என்ற கட்டிங் லெட்டரும், வெள்ளைக் கொடியும், வெள்ளைப் பெயிண்டுமாய் அலைந்து கொண்டிருந்த ஆட்டோ டிரைவர்கள் மத்தியில் ஒரு பரபரப்பு தெரிந்தது.

கோவை செசன்க கோர்ட் 'வெள்ளைக் கொடி ஆட்டோவைத் தடைசெய்பவர் மீது கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும்' என்று ஆர்டர் (21.11.97 அன்று - நம் கட்டுரை வெளியான ஒரு வாரத்தில்) போட்டதன் பின்னணியில் சில 'வெள்ளைக் கொடி' ஆட்டோ டிரைவர்களிடம் 'ஓட்டம் எப்படி' என வினவினோம்.

“எப்போதையும் விடக் கூடுதலாய் 50,60 ரூபாய் கிடைக்கிறது. எம்ட்டி ஓட்டம் இல்லை... கிடைக்கும், கிடைக்காது என்ற பழைய நிலைமை சுத்தமாய் மாறிவிட்டது. ஒரே சவாரி மயம்...! இனி வரும் நாளில் (விளம்பரப்படுத்தினால்) தினம் 100 சவாரி கூடக் கிடைக்கலாம்...! இப்போது ஜனங்கள் யாரும் ஆட்டோ என்று கேட்பதில்லை; வெள்ளைக் கொடிதான் வேண்டுமென்கிறார்கள்... அந்த அளவு பாப்புலர்...”

- சொல்லிக் கொண்டே நிற்க நேரமில்லை என்று பறக்கும் பலதரப்பட்ட ஆட்டோ டிரைவர்களின் மத்தியில் ஒரே உற்சாகம், வேகம், பரபரப்பு எல்லாம்... நமக்கும் சந்தோஷமாயிருந்தது. கோவையில் கடந்த 32 வருடங்களாக, நிகழாத ஓர் அதிசயம் இப்போதாவது நிகழ்ந்ததே...! ●

— கேயெஸ்வி

கோவிந்தா. அவரும் டவுட்ஃபயரை உல்டா பண்ணி ஒரு படம் - எடுத்துப் போட்டியாக வெளியிடத் திட்டமிட்டு கமலுக்குக் கலவர மூட்டிக் கொண்டிருக்கிறார்.

இங்கே போட்டி - சுந்தர்!

இனி 'காதலா காதலா', 'நாமிருவர் நமக் கிருவர்' படத்தின் மூலக்கதை :

ஹீரோ ஓர் ஓவிய விற்பனையாளர். ஓவியங்களை வாங்க ஆர்டர் கொடுத்தவர், இறந்து விடுகிறார்.

இழவு வீட்டுக்குப் போகிற ஹீரோ, அங்கே (சந்தர்ப்ப சூழ்நிலையால்) ஒரு பெண்ணுடன் (நிச்சயம் அழகான!) தங்க நேரிடுகிறது - காதல்!

காதல் ஹீரோவுக்கல்ல! ஹீரோ மீது, அந்தப் பெண்ணுக்கு. அவளோ, ஏற்கெனவே திருமணமாகி, கணவனிடமிருந்து பிரிந்து வாழ்பவள். ஒரு புதிய, நல்ல வாழ்வை உத்தே சித்து, நம் ஓவிய ஹீரோவை வளைக்கப் பார்க்கிறாள்.

ஆனால், ஹீரோவோ அந்தப் பெண்ணின் தங்கை மீது காதல் வயப்பட, சூழ்நிலையின் நிர்ப்பந்தத்தால் அக்கா - தங்கை இருவரிட மும் வேறு வேறு பெயர் மற்றும் கெட்டப்பில் காதலனாக நடிக்க வேண்டி ஆகிவிடுகிறது. (இல்லுமுல்லு, ரெட்டைவால் குருவி எல்லாம் ஞாபகம் வருகிறதா?)

ஒரு கட்டத்தில், ஹீரோ சகோதரிகளின் வீட்டில் தங்க வேண்டி வந்து விடுகிறது. இருவர் அறைகளுக்கும் மாறி மாறி ஓடி தமாஷ் பண்ணி (ரசிகர்களுக்குத்தான்!) கூத்தடிக்க வேண்டியதாகிறது.

கிளைமாக்ஸ்?

அக்காவையும் அவளது முன்னாள் கண வனையும் ஹீரோ சேர்த்து வைத்து, தான் விரும்பிய, தங்கையைக் கைப்பிடிப்பதுடன் சுபம். (Two much-ல் ஹீரோவின் இரட்டை வேஷத்தைக் கலைப்பது ஒரு நாய்.)

ஆங்கிலப் படத் தழுவல் என்பது நம்ம வர்களுக்குப் புதிய விஷயமல்ல. ஆனால், ஒரே படத்தை ஒரே சமயத்தில் இருவர் தழுவி, ஒரே நேரத்தில் வெளியிடுவது என்பது லேட்டஸ்ட்!

'காதலா காதலா'வில் ஒரே ஒரு கூடுதல் இன்ஸர்ட் - 'டூ மச்' உடன் பழைய பீம்சிங் கின் இந்திப் படமான 'ஜோரோம் கி குலாப்' பையும் சேர்த்துக் கரைத்திருப்பதாகத் தெரிய வருகிறது.

கமல் ரசிகர்களின் சந்தேகம் இனி இதுவாகத்தான் இருக்கும் :

மருதநாயகத்துக்குப் போட்டியாக யார், எதை எடுக்கப் போகிறார்கள்?

பி.கு : Two much கேஸட் எல்லா கேஸட் கடைகளிலும் கிடைக்கிறது. ●

— நாகராஜன் ராஜேஸ்வரி

தமிழக அரசே
காவல்துறையே

தொடர் போராட்டம்

பெரியார் நகர் கிராம மக்கள்

# அகதிகளால் ஆபத்து!?

## மதுரையில் பீதி!

விடுதலைப் புலிகளைக் கண்டு கொள்ளாமல் விட்டதாக குற்றம் சாட்டப்பட்டு தி.மு.க அரசு முன்பு கலைக்கப்பட்டதும், தற்போது அதே பிரச்னையால் மத்திய அரசே கவிழ்ந்து போயிருப்பதும் ஒருபுறமிருக்க... மறுபடியும் அதே குற்றச் சாட்டு எழுகிற மாதிரியான ஒரு போஸ்டர் மதுரையில் பரபரப்பு ஏற்படுத்தியுள்ளது.

''அகதிகள் என்ற பெயரில் தீவிர வாதிகள் இருக்கிறார்கள். பொது மக்களிடையே பயங்கர ஆயுதங்களுடன் வலம் வந்து அச்சத்தை ஏற்படுத்தி சகஜ வாழ்க்கையை பாதிக்கிறார்கள். அவர்களை அகற்றுக!'' என்று மதுரையில் எல்லா இடங்களிலும் போஸ்டர்கள்; பெரியார் நகர் கிராம மக்கள் வெளியிட்டவை.

''போஸ்டரைப் பார்த்ததும் உடனே பிரஸ்ஸில் விசாரித்து போஸ்டர் அடித்தவர்களைப் பிடித்து விசாரித்தோம். 'அகதிகள் முகாமில் வெடிகுண்டு தயாரிக்கிறார்கள்' என்றார்கள். சோதனையிட்டபோது அப்படியெல்லாம் எதுவுமில்லை. ஏதோ சொந்த வெறுப்பில் இப்படி போஸ்டர் அடித்து எங்களை டென்ஷனாக்கி விட்டார்கள். அவர்களை 'ஏதாவது புகார்னா எங்ககிட்ட சொல்லுங்க. தேவையில்லாம போஸ்டர் போடாதீங்க'ன்னு எச்சரித்து விட்டு வந்தோம்'' என்கிறது போலீஸ் தரப்பு.

நாம் அகதிகள் முகாம் இருக்கும் பெரியார் நகர் போனபோது போஸ்டர் அடித்த இளைஞர்களைச் சந்திக்க முடியவில்லை. மற்ற சிலரைச் சந்தித்துப் பேசினோம். ''தீவிரவாதிகள் இங்கு இருப்பதாகப் பல பேர் சொல்லுகிறார்கள். நான் யாரையும் ஆயுதத்தோடு பார்த்ததில்லை'' என்ற பதிலையே பலரிடமும் பெற முடிந்தது.

ஒரு சிலர் மட்டும் ''அடிக்கடி அவர்களால் இப்பகுதியில் பிரச்னை வந்திருக்கு. அவர்களை இந்த இடத்தை விட்டு மாற்றும்படி கலெக்டருக்குக் கூட மனு கொடுத்திருக்கு'' என்றார்கள்.

நாம் விசாரித்தவரை இலங்கைப் பெண்கள் சிலரை உள்ளூர் இளைஞர்கள் வம்புக்கு இழுத்ததால் சில பிரச்னைகள் வந்துள்ளன. இலங்கை இளைஞர்கள் சிலர் வேலையோ, வருமானமோ இல்லாததால் அப்பகுதி ரவுடிகளோடு சேர்ந்து கட்டைப் பஞ்சாயத்து, மிரட்டல், வழிப்பறி போன்ற சமூக விரோதக் காரியங்களில் ஈடுபட்டதாலும் சில பிரச்னைகள் ஏற்பட்டுள்ளன.

''போலீஸுக்கு ரெகுலராக மாமூல் போய் விடுவதால், அவர்கள் கண்டு கொள்ள மறுக்கிறார்கள்'' என்றும் சிலர் குற்றஞ் சாட்டுகிறார்கள்.

போஸ்டர் நூறு சதவீதம் உண்மை என்று கூற முடியாவிட்டாலும் நூறு சதவீதம் பொய் என்றும் கூறி விட முடியாது. எனவே நூறு சதம் உண்மையாகும் முன்பு போலீஸார் மற்றும் க்யூ ப்ராஞ்ச் போன்றவர்கள் எச்சரிக்கையாய்க் கண்காணிப்பதே எல்லாருக்கும் நல்லது.

செய்தி, படம்: **கிரண் நியூஸ்**



# அமரர் கல்கி நூற்றாண்டு விழாக் கொண்டாட்டங்களின் தொடக்கமாக

11.1.98
பொங்கல்
சிறப்பிதழில்

## அமரர் கல்கியின் அழியாக் காவியம்

எப்படி ஒவ்வொரு வாசகரையும் கவரும்படியாகக் கல்கி, பொன்னியின் செல்வனை எழுதினாரோ, அப்படி, ஒவ்வொருவரும் பாராட்டும்படியாக அதைப் படமாக்க வேண்டும் என்பதே என் கனவு!

– கமலஹாசன்

வாசகர்களை மேலும் குஷிப்படுத்த

## கல்கி கலெக்ஷன்!

அமரர் கல்கியின் நகைச்சுவை, சினிமா, கலை, இலக்கியம், அரசியல் கட்டுரைகள், சொல் ஓவியங்களிலிருந்து ஒரு சுவாரஸ்யமான தொகுப்பு- வாரம் தோறும்!

பட்டுக்கோட்டை பிரபாகர்
மயிலிறகால் எழுதும்

## நான் உன்னை சுவாசிக்கிறேன்..!

குளுகுளு காதல் தொடர்

## என்னைச் செதுக்கிய எண்ணங்கள்!

# பொன்னியின் செல்வன்

மீண்டும் ஆரம்பம்!



இதற்கு முந்தியோ பிந்தியோ— இப்படி யொரு அபாரமான நாவல் தோன்றியதில்லை.
—எம்.எஸ். உதயமூர்த்தி

ஐம்பது முறை படித்திருக்கிறேன் – ஒவ்வொரு முறையும் என்னை சார்ஜ் பண்ணிக் கொள்வதற்காக!
– அனுராதா ரமணன்

ஈடு இணையற்ற ஒரு மகோன்னதமான வரலாற்றுக் காவியம்! குறைந்தது பத்து முறை படித்து இருப்பேன். ஒவ்வொரு முறை படிக்கும் போதும் ஒரு படி தேனாகவே இனித்தது.
– வை.கோபால்சாமி

பத்மா ரவிசங்கர்

துப்பாக்கியால் எழுதும்

# இன்று வாழலாம், வா!

அதிரடி ஆக்ஷன் தொடர்

இன்னும் ஓர் இன்ப அதிர்ச்சி காத்திருக்கிறது; காத்திருங்கள்!

எம்.எஸ். உதயமூர்த்தியின்
அனுபவத் தொடர்

# மழை... மயிலை... மறக்க முடியாத மாலை!




• அமரர் சதாசிவம் படத்தைத் திறந்து வைக்கிறார் எம்.ஜி.பி




• மேடையில் சாவி, ஆராவமுதன், எம்.ஜி. பாலசுப்ரமணியம்

சென்னையா சிரபுஞ்சியா என்று புரியாத அளவுக்கு மழை! சென்னை சாலைகள் எல்லாமே ஆறாக மாறி குதித்தோடிக் கொண்டிருந்தன!

'கிருஷ்ண லீலா' ஹரிகதையைக் கேட்பதற்கு இதைவிட இசைவான சூழல் இருக்காது' என்று தீர்மானித்த ரசிகர்கள், அன்று விடேன் தொடேன் என்று யமுனையைக் கடந்த வசுதேவர் போல் மயிலை ஸ்ரீனிவாச சாஸ்திரி அரங்குக்கு வந்து சேர்ந்து விட்டார்கள்.

அமரர் கல்கி நினைவு தினம்; 21.11.97 அன்று காலமான கல்கி சதாசிவம் அவர்களுக்கு அஞ்சலிக் கூட்டமாவும் அமைந்தது.

கனத்த நெஞ்சுடன் வந்தவர்கள் கூட, அன்றைய பேச்சாளர்களின் உரையைக் கேட்டு சிரித்தார்கள் என்றால், அதற்குக் காரணம் கல்கி சதாசிவம், கல்கி கிருஷ்ணமூர்த்தி ஆகிய இரு மாமனிதர்களுக்கும் இருந்த நகைச்சுவை உணர்வுதான்.

அந்த உணர்வே அவ்விருவரையும் நெருங்கிய நண்பர்களாக்கியதைச் சுட்டிக் காட்டி தலைமையுரையாற்றினார் சாவி. சுதந்தரப் போராட்டத்தில் ஈடுபட்டு ஒரே சிறையில் வைக்கப்பட்ட காலத்தில் அந்த இருவரது கைகளும் சங்கிலிகளால் பிணைக்கப்பட்டிருந்தன. 'நமது பெற்றோர் நமக்கு காப்பு அணிந்து பார்க்க நினைத்தாலும் அதற்கான வசதி இல்லாதவர்களாகப் போய் விட்டார்கள். இப்போது அவர்களுடைய ஆசை நிறைவேறியிருக்கிறது' என்று அமரர் கல்கியும் சதாசிவமும் சிறைவாசத்தை மகிழ்ச்சியுடனும் பெருமிதத்துடனும் ஏற்றதைக் குறிப்பிட்டார்.

"தமிழ்ப் பத்திரிகையுலகுக்கு முன்னோடியாக விளங்கும் கல்கி வார இதழுக்கு இவ்விருவரும் இணைந்து அஸ்திவாரம் அமைத்தனர். சதாசிவமும் எழுத்துத் துறையில் இறங்கியிருந்தால் கல்கியைப் போலவே நகைச்சுவை மன்னராக இருந்திருப்பார். தனக்கு மிஞ்சிதான் தான தர்மம் என்ற பழமொழியைப் பொய்யாக்கியவர்; கொடுப்பதற்காகவே சம்பாதித்தவர்; அவரது நெற்றியில் துலங்கிய விபூதியைப் போலவே அவரது ஒவ்வொரு காரியத்திலும் துல்லியம் பிரகாசித்தது" என்று கூறிய சாவி, தாம் கல்கியில் பணியாற்றி விலகியபோது நேர்ந்த சம்பவத்தை நெகிழ்ச்சியுடன் நினைவு கூர்ந்தார்.

"அறுநூறு ரூபாய் நான் அலுவலகத்துக்குச் செலுத்த வேண்டியிருந்தது. அதைக் கொடுக்க இயலாத நிலையில் சதாசிவத்திடம் போய்ச் சொன்னபோது 'அதை அப்பவே மறந்தாச்சு' என்று பெருந்தன்மையுடன் வாழ்த்தி அனுப்பி விட்டார்..."

கணக்கு வழக்கின்றி சம்பாதித்து, தான தர்மங்களுக்கு உதவியவர், தம் வாழ்க்கையில் எளிமையை வைராக்கியத்துடன் கடைப்பிடித்ததை




• ஆராவமுதன் ஹரி கதை சொல்கிறார்

யும் வியந்து குறிப்பிட்டார் சாவி.

முன்னதாக சதாசிவத்தின் உருவப் படத்தைத் திறந்து வைத்துப் பேசினார் எம்.ஜி. பாலசுப்ரமணியம், ஐ.ஏ.எஸ் (ஓய்வு). தீவாகி விட்ட தமது வீட்டிலிருந்து வெளிவர முடியாமல் சிறைப்பட்டிருந்த செம்மங்குடிக்கும் அதைக் காரணமாக்கிய வருண பகவானுக்கும் நன்றி தெரிவித்து, அதனால் தமக்குப் படத்தைத் திறக்கும் வாய்ப்பும் கௌரவமும் வாய்த்தது என்று சதாசிவத்தைப் போலவே நகைச்சுவையுடன் பேச ஆரம்பித்தவர், உருக்கமான உண்மைகளையும் எடுத்துச் சொன்னார்.

“கர்ணனைக் கொடை வள்ளல் என்பார்கள். அவன் அரச பரம்பரையைச் சேர்ந்தவன். சதாசிவமோ, பதினாறு குழந்தைகளுள் ஒருவராக மணக்கால் கிராமத்தில் வளர்ந்தார். சொந்த முயற்சியில் கஷ்டப்பட்டு முன்னேறினார். பசியும் ஏழைமையும் என்னவென்று அறிந்ததாலோ என்னவோ, பிறர் வாட்டமுறுவதைக் காணச் சகியாமல் கணக்கற்ற உதவிகள் செய்தார். எதைச் செய்தாலும் கண்ணியத்துடனும் தனி முத்திரையுடனும் செய்தவர்; சோர்வே அறியாதவர். தமது பெயரை அவர் தொலைபேசியில் அறிவிப்பது கூட ஒரு தனி கம்பீரத்துடன் விளங்கியது...'' என்று தமது நெருங்கிய பழக்கத்தின் அடிப்படையில் எடுத்துக் கூறி அஞ்சலி செலுத்தினார் எம்.ஜி.பி.

‘அமரர் கல்கி தமது குழந்தைப் பருவத்தில் கால்களில் சதங்கைகட்டி, கிராமத்துத் திண்ணையில் ஹரிகதை நடத்தி மகிழ்ந்தார். அந்தப் பாரம்பரியக் கலையில் அவருக்கு ஆழமான ஈடுபாடும் தனியான ப்ரியமும் உண்டு' என்பதை வரவேற்புரையில் நினைவு கூர்ந்தார் கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளையின் நிர்வாக அறங்காவலர் கி. ராஜேந்திரன்.



• கூட்டத்தில் ஒரு பகுதி

“அதனால்தான் அமரர் கல்கியின் எழுத்து நடையில் கூட ஹரிகதை யுக்தி நிறைய கையாளப்பட்டிருக்கிறது...'' என்று சாவி சுட்டிக்காட்டினார். “அவர் கட்டுரையில் நாரதர் வருவார். புராண இதிகாசப் பாத்திரங்களெல்லாம் வந்து சமூக, சமுதாய விஷயங்களைச் சிரிக்க சிரிக்க அலசுவார்கள். சரித்திரக் கதைகளில் முன்னோடி, விமர்சன வித்தகர், நகைச்சுவை மன்னர், பயணக் கட்டுரை நிபுணர் என்று பன்முக எழுத்தாளராக அமரர் கல்கி பிரகாசித்ததற்கு இந்த ஹரிகதை ஆர்வமும்கூட ஒரு காரணம்'' என்றவர், அவரது நினைவு நாளன்று கலைமாமணி கல்யாணபுரம் ஆராவமுதன் ஹரிகதை நிகழ்த்துவதன் பொருத்தத்தை வரவேற்றார்.

பின்பாட்டுப் பாடிய வீரராகவன், வயலின் வாசித்த ஹேமலதா, மிருதங்கக் கலைஞர் கணேசன் யாவரும் முழுமையான ஒத்துழைப்பைத் தர, வான மழைக்குப் போட்டியாக கான மழையும் கவிதைச் சாரலும் நகைச்சுவைத் தூறலும் சேர்ந்த கலவையாக ஆராவமுதன் அன்று வழங்கிய 'கிருஷ்ண லீலா' ஹரிகதை நிகழ்ச்சி அமைந்தது.

திருக்குறள், திருப்பாவை, ஆழ்வார் பாசுரங்கள், பாரதி பாடல்கள் என்று தமிழ்க் கவிதை அழகை அவர் கதையுடன் பின்னியதைச் சொல்வதா?

தியாகராஜர் முதல் பாபனாசம் சிவன் வரையிலான வாக்கேயக்காரர்களின் கீர்த்தனைகளையும், சுலோகங்கள், வேத வேதாந்த வாசகங்களையும் கொண்டு சிந்தனைச் சங்கிலியை அவர் வளர்த்துக் கொண்டே போன திறமையைச் சொல்வதா?

காட்டாறு இடையிடையே சிற்றருவியாக மாறி பிரமிப்பூட்டுவதைப் போல் காம்போதி, பைரவி, சங்கராபரணம், நீலாம்பரி, ஹம்சானந்தி என்று கலபமாக ராகங்களைக் கையாண்டதைச் சொல்வதா?

இதையெல்லாம் சொல்வதைவிட 'தமிழர்கள் அனைவரும் ஆராவமுதன் ஹரிகதையை அவசியம் ஒரு முறை சென்று கேட்க வேண்டும்...' என்று சொல்லலாம்.

— நமது நிருபர்

படங்கள் : யோகா



• ஊர்வசி



• யோகா

# செல்போன் : பயனா? பந்தாவா?

அண்மையில், மியூஸிக் அகாடமியில் ஓர் இசை நிகழ்ச்சி. செல்போன் நிறுவனமான ஸ்கைசெல், தன் சந்தாதாரர்களுக்காக, பிரத்யேகமாக ஏற்பாடு செய்திருந்த நிகழ்ச்சி அது. நிகழ்ச்சிக்கான அழைப்பிதழ்களை, தங்களது கஸ்டமர்களுக்கு அனுப்பி வைக்க, அன்றைய இசை நிகழ்ச்சிக்கு அரங்கு கொள்ளாத கூட்டம்.

அன்று மியூசிக் அகாடமிக்கு வந்த அனைவரது கையிலும் செல்போன்தான்! எந்தப் பக்கம் திரும்பினாலும், செல்போனில் பேசும் முகங்கள்! அப்படி என்னதான் தலைபோகிற வேலை இருக்கும் இத்தனை பேருக்கும்? என்ற எண்ணம் மனத்தில் எழுந்தது. அத்தனை பேருக்கும், அந்தக் கணத்தில் மிக முக்கியமாக போனில் தொடர்பு கொள்ள வேண்டிய கட்டாயம் சாத்தியமென்று நம்ப முடியவில்லை.

"ஆளாளுக்கு கையில செல்போனை வெச்சுகிட்டு பிலிம் காட்றாங்க!" என்று கமெண்ட் அடித்தார் ஒருவர்.

அண்மையில் சினிமா ஷூட்டிங் ஒன்றுக்குச் சென்றிருந்தபோது, அந்தப் படப்



• நல்லி குப்புசாமி



• நாராயணசாமி



• பாலசுப்ரமணியன்





• ஜே. விஸ்வநாத்

பிடிப்பிலிருந்த ஹீரோ, தனக்குரிய காட்சி முடிந்து, டைரக்டர் 'கட்' சொல்லி விட்டால் போதும், மறுகணம் உதவியாளரிடமிருந்து செல்போனை கைப்பற்றிக் கொண்டு பேச ஆரம்பித்து விடுவார். அடுத்த ஷாட்டுக்குக் கூப்பிடுகிறவரை உரையாடல் தொடரும். யூனிட் ஊழியர்களை மிகவும் எரிச்சலடையச் செய்த அவரது நடவடிக்கைக்கு அப்புறம் அந்த நடிகருக்கு யூனிட்டில் வைத்த செல்லப் பெயர் "இரட்டைப் பிறவி."

''இவங்களுக்கெல்லாம் செல்போன் ஒரு பந்தா சார்! கறுப்பிலும், வெளுப்பிலும் வாங்கறாங்க இல்லை! அந்தப் பணத்தை செலவழிக்கணுமில்லை? செல்போன்காரன் சம்பாதிக்கிறான்'' என்றார் அந்த யூனிட் ஊழியர் ஒருவர்.

ஆக, செல்போன் என்பது பந்தாவுக்குத்தானா? இல்லை நிஜமாகவே உபயோகமாக இருக்கிறதா?



• சோ

"ரொம்ப உபயோகமாகத்தான் இருக்கிறது'' என்கிறார் பிரபல குழந்தைகள் மருத்துவரான டாக்டர் ஜே. விஸ்வநாத். எந்த நேரத்திலும், யாரும் என்னை காண்டாக்ட் பண்ண முடிகிறது. ஆனால் நம்மவர்களுக்கு டெலிபோனில் சுருக்கமாய்ப் பேசுகிற பழக்கமே கிடையாது. அவர்கள் பேசப் பேச, எனக்குத்தானே பில் ஏறும்? எனவே, என்னுடைய செல்போனில் தொடர்பு கொள்ளுகிறவர்கள், என்னுடன் நிறைய பேச வேண்டிய சூழ்நிலையில், நான் எங்கே இருக்கிறேனோ அந்த இடத்தில் இருக்கிற டெலிபோன் நெம்பரைச் சொல்லி, அந்த எண்ணில் கூப்பிடச் சொல்லுவது என் பழக்கம். என்னைப் பொருத்தவரை செல்போன் ரொம்ப யூஸ்ஃபுல்!'' என்கிறார்.

''சில சமயங்களில் ரொம்ப நியூஸென்ஸ் தான்'' என்கிறார் புகைப்படக் கலைஞர் யோகா. ஒருமுறை முதலமைச்சர் கலைஞரைப் போட்டோ எடுத்துக் கொண்டே இருக்கிறேன். செல்போன் ஒலித்தது. அப்போது போய் டெலிபோன் பேச முடியுமா? சட்டென்று 'செல்'லை ஆஃப் செய்துவிட்டு, போட்டோ எடுக்கிற பணியைத் தொடர்ந்தேன். திருமண முகூர்த்தத்தின்போது, பிஸியாக போட்டோ எடுத்துக் கொண்டிருக்கிறபோது, செல்போன் அலறும்! அப்போது டெலிபோன் பேசிக் கொண்டிருந்தால், முகூர்த்த போட்டோக்களை யார் எடுப்பது? ஆனாலும் மொத்தத்தில் உபயோகமாகத்தான் நான் உணருகிறேன்.''

நல்லிகுப்புசாமி செட்டியார் ஒருவிதத்தில் அதிருஷ்டக்காரர் என்றே சொல்ல வேண்டும். வருடத்துக்கு ஐம்பதாயிரம் ரூபாயைக் கட்டி விட்டால் போதும். வரைமுறை ஏதுமின்றி பேசிக் கொள்ளலாம். மாதா மாதம் பில் கட்ட வேண்டிய அவசியமில்லை. இந்தச் சலுகை பெற்ற ஒருசில சென்னை பிரமுகர்களுள் இவரும் ஒருவர்.

''செல்போன் வைத்திருப்பதால், எனக்கு ஒருநாளைக்கு இருபத்தி ஆறு மணி நேரம் இருப்பது போல உணர்கிறேன்'' என்கிறார் நல்லி! ஒருநாளைக்கு எப்படியும் இரண்டு மணி நேரங்கள் பல இடங்களுக்கும் போக,

• வி. மோகன்




• பரிதி இளம்வழுதி

வர காரில் இருக்கும்படி ஆகும். முன்பெல்லாம் அந்த நேரத்தில், கூட வருபவரிடம் பேசுவது, படிப்பது என்று ஏதாவது செய்வேன். இப்போது, கையில் செல்போன் இருப்பதால், போனில் பேச வேண்டிய விஷயங்களை அந்த நேரத்தில் பேசி, நேரத்தை மிச்சப்படுத்தி விடுகிறேன். என்னைப் பொருத்தவரை செல்போன் மிக மிக உபயோகமான ஒரு கருவி'' என்று சர்டிபிகேட் தருகிறார் நல்லி.

"தொகுதியில் ஏதாவதொரு முக்கிய பிரச்னை என்றால், சம்பந்தப்பட்டவர்கள் என்னை உடனடியாகத் தொடர்பு கொண்டு சொல்ல செல்போன் மிகவும் உபயோகமாக இருக்கிறது. இருந்தாலும் கூட என் செல் நம்பரைக் குறிப்பிட்ட சிலருக்குத்தான் கொடுத்திருக்கிறேன். என் மனைவிக்குக் கூட கொடுக்கவில்லை. காரணம் - வரப் போகிற பில்தான். அநாவசியமாகப் பயன்படுத்தாமல் அவசியமானதற்கு மட்டுமே பயன்படுத்தினால் செல்போன் பயனுள்ளதே தவிர, பந்தாவானதல்ல!'' என்று உறுதியாகச் சொல்கிறார் துணை சபாநாயகர் பரிதி இளம்வழுதி.

''நான் செல்போனை பயன்படுத்துவதே கிடையாது'' என்கிறார் சோ. 'அப்புறம் ஏன் செல்போன் வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?' என்று கேட்டால், ''எனக்குக் கிடைத்தது. நானும் வாங்கிக் கொண்டேன். ஆனால் பயன்படுத்துவது இல்லை. வெளியில் எங்காவது போகும்போது, என் ஆபீசில் இருப்பவர்களிடம், "விஷயம் ஏதுமில்லை என்றாலும் பரவாயில்லை. சும்மாவாவது என்னை செல்லுலர் போனில் அழைத்து, ஒரு ஹலோ சொல்லுங்கள்'' என்கிறேன். அப்போ கூட, யாரும் போன் பண்ணுவது கிடையாது'' என்கிறார்.

சென்னையில், பா.ஜ.க. தலைவர் அத்வானிக்கு நடந்த பாராட்டுக் கூட்டத்தில் சோ கலந்து கொண்டார். இரவு வீட்டுக்குப் போனவுடன்தான், தன் செல்லுலர் போனை மீட்டிங்கின் போது எங்கோ மறந்து வைத்து விட்டது நினைவு வந்தது. பகல் பார்க் மீட்டிங் மேடையில் ஒரு செல்போன் கிடப்பதைக் கண்ட யாரோ ஒருவர், பா.ஜ.க. ஆபீசில் அதைக் கொடுக்க, ஒருவழியாய் சோவுக்கு அவரது செல்போன் திரும்பக் கிடைத்தது. தொலைந்த செல்போன் சோவுக்குத் திரும்பக் கிடைத்து விட்டது என்றாலும், நடிகர் - டைரக்டர் மணிவண்ணன் உட்பட சில திரையுலகப் பிரபலங்கள் தங்கள் செல்போனை பறிகொடுத்திருக்கிறார்கள். "செல்போன் காணாமல் போனால், அந்தத் தகவலை உடனே செல்போன் நிறுவனத்துக்குத் தெரிவித்து விட்டால், உடனடியாக அந்த டெலிபோன் யாரிடம், எங்கு இருக்கிறது என்று தெரியாவிட்டாலும் கூட, அதை உடனடியாக செயலிழக்கச் செய்து விட முடியும்! ஆனாலும் காணாமல் போன டெலிபோன் இன்ஸ்ட்ருமெண்ட் போனதுதான்! புதிய கருவியை வாங்கிக் கொண்டு, புதிய எண்ணையும் பெற்றுக் கொள்ளலாம்'' என்கிறார் ஆர்.பி.ஜி. செல்லுலர் நிறுவன மார்க்கெட்டிங் மானேஜரான ஸ்ரீவத்ஸன்.

எழும்பூரில் சைனீஸ் உணவகம் நடத்தி வரும் வி.ஆர். பாலசுப்ரமணியம், "இத்தனை நாள் செல்போன் என்று ஒன்று இல்லாமல் எப்படி வாழ்ந்தோம் என்றே ஆச்சரியமாக இருக்கிறது. அத்தனை உபயோகம் போங்கள்!'' என்கிறார். "அதிலும் குறிப்பாக அவுட்டோர் கேட்டரிங் ஆர்டர்களின் பேரில், சர்வீஸ் செய்ய என் கேடரிங் டீம் போகிற போது, கையில் செல்போனைக் கொடுத்து அனுப்பி விட்டால், எந்த பிரச்னையானாலும், வெகு சுலபமாக சமாளித்து விட முடியும்.''


• ஏவி.எம். சரவணன்

"ஆண்கள் வசதியாய் செல்போனை பாக்கெட்டில் வைத்துக் கொண்டு விடுகிறார்கள். உங்களுக்கு அசௌகரியமாக இல்லையா?'' இந்தக் கேள்வியை நடிகை ஊர்வசியிடம் கேட்டபோது, "அது கஷ்டம் தான். ஆனால், என்னுடைய செல்போன், நான் பயன்படுத்துகிற போது மட்டுமே என்னிடம் இருக்கும். மற்ற நேரத்தில் எல்லாம் என் அசிஸ்டெண்ட்டிடம்தான் இருக்கும். முன்பெல்லாம் ஷூட்டிங் ஸ்பாட்டிலிருக்கிற ஒருவரைத் தொடர்பு கொள்ள வேண்டுமானாலும் சரி, ஷூட்டிங் ஸ்பாட்டிலிருந்து வெளியே யாரையாவது தொடர்பு கொள்ள வேண்டுமானாலும் சரி ரொம்ப கஷ்டமாக இருக்கும்! செல்போன் வந்தபின் நோ ப்ராப்ளம்'' என்கிறார் ஊர்வசி.

"காரில், பைக்கில் போகிறபோது, செல்போனில் பேசுகிறவர்களை நான் பார்க்கிறேன்! இது ரொம்ப ஆபத்தானது. இதுபற்றி

போலீஸ் கடுமையான எச்சரிக்கை செய்ய வேண்டும்!" என்கிறார் தி. நகரைச் சேர்ந்த 'எக்ஸ்நோரா' மோகன். இவர் தரும் இன்னொரு ஆலோசனை : கார்ப்பரேஷன், மின்சாரம், காவல் துறை, குடிநீர் வாரியம் போன்ற அத்தியாவசிய சேவைத் துறைகளில் உள்ள முக்கியமானவர்களுடன் எந்த நேரத்திலும் தொடர்பு கொள்ள அவர்களுக்கு அரசு, செல்போன் கொடுக்க வேண்டும். செல்போன் நிறுவனங்கள் இத்தகைய கனெக்ஷன்களுக்குச் சலுகைக் கட்டணம் அளிக்கலாம்."

"செல்போனை அளவுடன் பயன்படுத்தினால் அதுபோல மிக மிக உபயோகமானது வேறு கிடையாது. செல்போன் வைத்திருக்கிறவர்கள் சகட்டுமேனிக்கு எல்லாருக்கும் தங்கள் எண்ணைக் கொடுத்து விடக் கூடாது. ஏன் என்னையே எடுத்துக் கொள்ளுங்கள். எட்டு, பத்து பேருக்கு மேல் என் செல்போன் எண் யாருக்கும் தெரியாது'' என்கிறார் ஏவி.எம். சரவணன்.

பொது நிகழ்ச்சிகளுக்குப் போகிறபோது கையோடு செல்போனை இவர் வைத்துக் கொள்ளுவதில்லை. காரில் டிரைவரிடமே கொடுத்து விட்டுப் போகிறார். மிக முக்கியமான விஷயம் என்றால் மட்டுமே, சரவணனுக்கு தகவல் தெரிவிக்கிறார் அவரது டிரைவர்!

**கை**யில் செல்போன் இருக்கிறது என்பதற்காக, கண்டபடி பேசிவிட்டு, எக்கச்சக்கமாய் பில் வந்தபின் அதுபற்றிக் கவலைப் படுவது சிலருக்கு வழக்கம். இவர்களுக்குப் பயன்படும்விதமாக, "சிம் கார்டு" என்று ஒரு கார்டு இருக்கிறது என்கிறார் டி.எஸ். நாராயணசாமி. மொத்தமாய்ப் பணம் செலுத்தினால், அது இந்த சிம் கார்டில் பதிவாகிவிடும். அதை செல்போனில் பொருத்திவிட வேண்டும். நாம் பேசப் பேச, அதற்குரிய மீட்டர் கண்ணெதிரே தெரியும். அது சுருக்கமாய்ப் பேச எச்சரிக்கையாய் அமையும்" என்கிறார் இவர்.

"நீங்கள் பர்மனென்டாய் செல்போன் வைத்துக் கொள்ளாதவரானாலும் பரவாயில்லை. உங்கள் வீட்டில் திருமணம் போன்று ஏதாவது விழா என்றால், குறிப்பிட்ட சில நாட்களுக்கு மட்டும் கூட செல்போனை வாடகைக்கு எடுத்துப் பயன்படுத்தலாம். இதற்குக் கல்யாண சீசனில் நல்ல வரவேற்பு உள்ளது" என்கிறார் ஸ்கைசெல் நிறுவன மானேஜிங் டைரக்டர் திவாகர்சிங்.

— **கௌதம்**

அட்டை வண்ணப்படம் : **பிரவீண்குமார்**

வண்ணப் படங்கள் : **யோகா**



''நம்ம கட்சி மாநாட்டுக்கு வெளிமாவட்டங்களிலிருந்து ஆட்களைக் கூட்டிட்டு வந்ததுக்கு ஒரு லட்ச ரூபாய் செலவுன்னு கணக்கு எழுதியிருக்கே, சரி! இலவம்பஞ்சு வாங்க ஐம்பதாயிரம் ரூபாய் கணக்கு எழுதியிருக்கியே! அது எதுக்கு?''

''நம்ம கட்சி பேச்சாளர்களோட பேச்சைக் கேட்டால் கடுமையான தலைவலி வருதாம். காதுல அடைச்சுக்க பஞ்சு கொடுத்தால்தான் வருவோம்னு அந்த ஆட்கள் தீர்மானமா சொல்லிட்டாங்க, தலைவரே!''



''நம்ம கட்சித் தலைவரைப் பதவியிலிருந்து இறக்கி இளமைத் துடிப்பா யாரையாவது நியமிச்சாகணும்னு சொன்னால் கேட்டங்களா?''

''ஏன்? என்ன ஆச்சு?''

''ஆயிரம் தாத்தா, பாட்டிகளுக்கு அறுபதாம் கல்யாணம் நம்ம கட்சி சார்பாக நடத்தத் திட்டம் தீட்டியிருக்கார்!''

— பாலா

---

''இந்த ஏரியாவில் திருட்டுப் பயம் ரொம்ப ஜாஸ்தின்னு சொல்றியே... அதனாலதான் வீடுகளே இல்லையோ?''

''என்னது! நேற்று கூட நான்கு வீடுகள் இருந்ததே!''

— வெ. ராஜாராமன்



காஞ்சனா பிரகாஷ்ராவ்

# 1

சௌதாமினிக்கு ஜனவரி 26 அன்று கல்யாணம். அதில் பட்டாபி ராமனுக்குத்தான் நிலை கொள்ளாத சந்தோஷம்.

ஆடும் அவள் ஜிமிக்கிகளின் அழகில் சொக்கிக் கிடக்கும் மாப்பிள்ளை தியாகராஜனைவிட அதிக சந்தோஷம்.

"குரலை விடுங்கோ... பொண்ணும் ரொம்ப ரொம்ப ஸ்வீட், தெரியுமா..." – பூரிக்கும் தியாகுவின் அம்மாவைவிட ரொம்ப ரொம்ப சந்தோஷம்.

ஒரு நட்சத்திரப் பாடகியை மருமகளாக்கிக் கொள்ளப்போகும் கர்வத்தில் தலை வெடிக்க விருந்த தியாகுவின் அப்பாவைக் காட்டிலும் ரொம்ப ரொம்ப ரொம்ப சந்தோஷம்!

'மடிப்பாக்கம் பக்த ஜன சபை முதல் மியூசிக் அகாடமி வரை மேடை மேடையாக ஆக்கிரமித்து, அநியாயத்துக்குப் புகழை அள்ளிக் கொண்டிருக்கும் போட்டிப் புயல்! அந்தச் சூறாவளியின் பாதையில் கல்யாணம் என்பது முற்றுப் புள்ளியாகாவிட்டாலும் அரைப்புள்ளியாகவாவது இருக்காதா...?' என்ற நம்பிக்கையுடன் இருந்தான் பட்டாபி. அந்த அரைப் புள்ளி அவகாசத்தில் என்னவெல்லாம் பண்ணி விடலாம்!...

அவன் திட்டத்தைக் கேட்ட பவித்ரா சிரித்தாள்.

"ஆனாலும் நீ பழைய பஞ்சாங்கம் பட்டாபி! PPP- பழைய பஞ்சாங்கம் பட்டாபி!" – அவள் சிரித்த வேகத்தில் கண்ணோரங்கள் சுருங்கி நீர் வெளிப்பட்டதை நுணுக்கமாய் கவனித்தான். தலை பின்னுக்குச் சாய்ந்திருந்தது.

'அப்படியே பிடரியில் கை கொடுத்து இழுத்து...' அவன் கற்பனையை வளர்த்த விடாமல் குறுக்கிட்டாள்:

"இந்தக் காலத்துல எந்தப் பொண்ணாவது கல்யாணத்தைக் காரணமாக்கிக் கச்சேரியை விடுவாளா?"

"எப்படி முடியும்...? வீட்டைப் பார்க்க வேண்டாமா? புருஷன், மாமியார், நாளைக்குக் குழந்தை பிறந்தா...? மாசத்துல இருபத்தஞ்சு நாள் கச்சேரின்னு ஓட முடியுமா? சென்ல நாற்பத்தெட்டு மணி



# டிசம்பர் கனவுகள்

நேரத்துல மூணு கச்சேரி பண்ண முடியுமா பவித்ரா..?''

''அசடு! பொறந்த குழந்தையை 'இந்தா புடிச்சுக்கோ'ன்னு புருஷன் கைல கொடுத்துட்டு அவ அவ அமெரிக்காவுக்கு ஃப்ளைட் ஏறிண்டிருக்கா...''

"ஹாரிபிள்!"– காதை மூடிக் கொண்டான் பட்டாபி.

''என்ன ஹாரிபிள்?.... ப்ரொபஷன்னு முழுசா இறங்கிட்டா இதையெல்லாம் பார்க்க முடியாது...''

''அதனாலதான் நான் ரொம்ப தெளிவா இருக்கேன்... 'கரீயர்' 'கரீயர்'ன்னு பறக்கற பொண்ணு நமக்கு ஒத்தே வராது...''

ஒரு கோபப் பார்வை அவனை தகித்தது. பொருட்படுத்தாதது போல் முகவாயை உயர்த்தி மின் விசிறியைப் பார்த்தான்.

அவன் கண்களின் பொய்யான உறுதியும் சுத்தமான முகத்தில் தவழ்ந்த குழந்தைத் தனமும் காட்டிக் கொடுத்தன. அடங்காமல் சிலுப்பி நின்றது கேசம்.

சில கணங்களுக்கு மேல் பார்க்க முடியாமல் கண்களை அப்புறப்படுத்தினாள் பவித்ரா. அவன் அருகாமையில் இப்படிக் கரைவது அதிகமாகி வருகிறது. காலை எழுந்தால் அவன் நினைவுடன் கூடவே மனசிலிருந்து புன்னகை மலர்கிறது. அடிக்கடி தன்னையே குறுக்கு விசாரணைக்குட்படுத்த வேண்டியிருக்கிறது.

'இது என்ன ஒரு மயக்கம்..? கலையிடம் கொண்ட காதல் கலைஞனிடம் ஈர்ப்பாக மாறுகிறதா? அப்படி மாறலாமா..? மாற விடலாமா..? அவன் என்ன நினைப்பான்..?' 'கேள்விகளால் தன்னை வருத்திக் கொள்வதில் கூட ஒரு சுகமிருக்கிறதோ..?' – இறுதியில் கேள்விகளுக்கு விடை கொடுத்தனுப்பிவிட்டு இனிமையில் திளைப்பதென்பதும் வாடிக்கையாகி வருகிறது...

அவள் சலனத்தை அவனும் கவனித்திருக்க வேண்டும்.

"ஏய்...!"

அந்த அதட்டலில் இருந்த அந்நியோன்னியம் அவள் உறுதிகளையெல்லாம் உடைத்து வீழ்த்தியது. ஒரு பகீரதப் பிரயத்தனத்துடன் மீண்டாள். 'முதலில் இவனுக்குத் தெளிவூட்டியாக வேண்டும். அப்புறம்தான் மற்றவை.'

''இதோ பாரு பட்டாபி! நீ தெளிவாயில்லே... ஸாரி. வெரி ஸாரி... எத்தனை முறை சொல்லியாச்சு! உனக்குன்னு ஒரு இடமிருக்கு; நீ இன்னொருத்தர் இடத்துக்காக ஏன் ஆலா பறக்கறே..? சௌதாமினியோட இடத்தைப் பிடிக்கணும்ன்றது என்னவொரு பைத்தியக்காரக் கனவு...''

''ஏன்னா, என் இடம் இரண்டாவது இடம்தான்... எத்தனை நாளைக்கு இரண்டாவது இடத்துலயே இருக்கறது?... எப்பவுமே முதல் இடம் சௌதாமினி, சௌதாமினி, சௌதாமினிக்குத்தானா..?''

பவித்ராவிடம் பதில் இல்லை. சௌதாமினி என்றாலே முதன்மை. அகராதியில் புது அர்த்தம் எழுதலாம்! விதவிதமான வகைகளில் அது



வெளிப்பட்டது.

"டிசம்பர் இருபத்தினாலு நான் பாடறேன்." என்று பட்டாபி சொன்னால், "அந்த டேட்டுக்கு ஏற்கெனவே சௌதாமினி ஒத்துண்டிருக்காளே.." என்பார்கள்.

"நீ நன்னாத்தான் பாடறே பட்டாபி, ஆனா சௌதாமினிக்கு ஒரு கூட்டம் வருது பாரு.."

"ஆனாலும் அந்த வாய்ஸ் அலாதிதான்டா.."

"ஃப்ரீ கச்சேரின்னு இல்லே.. டிக்கெட் போட்டாலும் கலெக்ஷன் எப்படி ஆகறதுங்கறே..!"

"என்னமோ தெரியலை.. அவ பாடற எல்லா கச்சேரியும் ஜோரா அமைஞ்சுடறது."

"பார்க்கறதுக்கே ஒரு களையய்யா இருக் கோல்லியா.. அதான் ஜனங்களுக்குப் பிடிச்சுப் போய்டறது.."

ஆங்! அதுதான், அதுவேதான்! பார்ப்பதற்கு லட்சணமாய், பட்டுப் புடைவையின் பளபளப்பும் சுருள்கள் சூழ்ந்த முகத்தில் ஸ்டிக்கர் பொட்டும் உதட்டுச் சாயமும் நிறத்தைத் தூக்கிக் காட்டும் பவுடர் பூச்சும்.. இந்தக் கலவைதான் பாட்டுக்கு முன்னதாகக் கட்டிப் போடுகிறது.

அதோடு அந்தப் புன்னகை! திரை தூக்கியதுமே, புடைவைத் தலைப்பை இலேசாகத் திருத்தி விட்டுக் கொண்டு, பவ்யமாய் கரம் குவித்து வீசும் அந்தக் காந்த மின்னல்! 'ரசிக மகா ஜனங்களே வந்தனம்' என்று சொல்லாமல் சொல்லும் அந்த இலேசான தலை சாய்ப்பு; பக்க வாத்தியக்காரர்கள் பக்கம் 'தயாரா?' என்று பார்வை திருப்பி, அனுமதி பெற்று ஆரம்பிக்கும் நளினம்..

அத்தனையிலும் கட்டுண்டு கூட்டமே இளகிக் கிடக்கும். அனாயாசமாய் ஏறி, இறங்கும் குரல் ஒலிக்க ஆரம்பித்தாலோ கேட்கவே வேண்டாம்.. புது அரிசிச் சாதமாய்க் குழைந்தே போகும் கூட்டம்.

இத்தனைக்கும் சங்கீதம் ஒன்றும் அவ்வளவு உசத்தி இல்லை. ஆழங்களைத் தொடாமல், குரல் வளத்தையும் இனிமையையும் கொண்டே லாகவமாய்க் கோட்டை கட்டிக் கொண்டிருந்தாள் சௌதாமினி.. எந்தப் பக்கம் பார்த்தாலும் பளபளத்த கண்ணாடிக் கோட்டை! சின்ன அதிர்ச்சியில் அத்தனையும் நொறுங்கிப் போகாதோ..?

'கான்டினென்டல் பிரேக்ஃபஸ்ட், கான்வென்ட் கர்ல்ஸ் லிஸ்பிங் டாமில்' என்றெல்லாம் விமர்சகர் கேலிகூட குட்டிப் பார்த்தார். ரசிகர்கள் கோபக் கடிதங்களால் அவரைக் குதறி விட்டார்கள்! அந்த ரசிகர்களின் மெத்தென்ற அரவணைப்பில் கண்ணாடிக் கோட்டை பத்திரமாயிருந்தது– சௌதாமினியின் கச்சேரிகளை விமர்சிப்பதையே அவர் நிறுத்திக் கொண்டார்.

இன்று அதே விமர்சகர் பட்டாபியின் கச்சேரி பற்றி எழுதியிருக்கிறார். பவித்ரா



அவனுக்காக அதை எடுத்துப் படித்தாள்:

"தேவையான அம்சங்களின் சேர்க்கையால் மட்டுமே ஒரு கச்சேரி நிறைவு பெறுவதில்லை.. தேவையற்ற அம்சங்களை நெருங்கவிடாமல் இருப்பதும் முக்கியம். பட்டாபிராமனின் பாட்டில் அனாவசியங்கள் இல்லை. ஆழம் இருக்கிறது. அழகுகளைத் தேடித் தரும் முயற்சியில் ஸ்படிக சுத்தம்! அவர் பெயருக்கேற்ற, அமைதியான கம்பீரம் – தோடிராக ஆலாபனையில்.."

மேற்கொண்டு படிக்க முடியாமல் பவித்ராவின் குரல் தேங்கியது. தொண்டையைக் கனைத்து, பேப்பரை மூடி வைத்தாள்.

"இதைவிட என்ன வேணும் பட்டாபி?.. சௌதாமினிக்கு ஒரு கூட்டம் வருதுன்னா வந்துட்டுப் போகுது. அதைப் பார்த்து சந்தோஷப் படுவியா, இல்லை இப்படிப் பொறாமையில வெந்து வெந்து புண்ணாவியா..?"

"இப்ப எனக்கு நிஜத்தை சொல்லியாகணும் நீ.. இத்தனை நாளா என் ரசிகைன்னு சொல்லிக்கிட்டிருந்தியே.. உண்மையில heart of hearts you are Sowdamini's fan; not mine... not mine at all.... தெரியும் எனக்கு.."

ஆத்திரத்தில் அவனை அறைந்து விடலாம் போலிருந்தது அவளுக்கு. கொந்தளித்த அந்த முகத்தைப் பார்த்தபோதோ பரிதாபம் மேலிட்டது. எழுந்து அவன் அருகில் போய் உறுதியாகக் கையைப் பற்றினாள்.

"இல்லை பட்டாபி... நான் சௌதாமினி ரசிகையில்லை... அது அவளுக்கும் தெரியும் உனக்கும் தெரியும்.."

அவன் கை இப்போது அவளுடையதைப் பற்றியது. இக்குத் தெரியாத தனிமையில் துணை தேடும் பாதுகாப்பற்ற பற்றுதல்.

"...நான் உன்னோட விசிறியுமில்லே பட்டாபி.."

"ஹாங்..!"

"வெறும் ஆட்டோகிராஃப் ரசிகையா..? நான் அதுக்கெல்லாம் ரொம்ப மேலே.. அதுவும் உனக்குத் தெரியும்.."

அவன் கைகளை விடுவித்துக் கொண்டிருந்தான்.

அவள் கொஞ்சம் ஆடித்தான் போயிருந்தாள்.

"இவ்வளவு நல்லவனாயிருக்கியே.. இந்த ஒரு விஷயத்துல மட்டும் ஏன் மூடத்தனம்..?"

**“யாருய்ய நீ? எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கே?”**

**“அய்யய்யோ, உங்க ஜம்போ மந்திரி சபைல நான் ஒரு அமைச்சர், தலைவரே!”**

**— வந்தவாசி பா. ஜெயக்குமார்**

“எதுல...?” – ஏதுமறியாதவன்போல் கேட்டான்.

“சௌதாமினி விஷயத்துல... அவளைப் போட்டியா நினைக்கறதும் தோற்கடிக்க பறக்கறதும்...”

“கொஞ்சம் மூடத்தனம் இல்லாட்டா எனக்கு திருஷ்டி விழுந்துடாதா...?”

சிரிப்பு வந்தாலும் அவன் தப்பித்தல் மனோபாவம் உறுத்தியது. கட்டிக் காட்டினால் தனியொரு விவாதம் வளரும்.

“சௌதாமினி கல்யாணத்துக்கு இன்விடேஷன் வந்திருக்கா பவித்ரா?”

“வந்திருக்கு...”

“போவியா...?”

“கட்டாயமாப் போகணும்...”

ஆயிரம் பேர் வந்தார்கள்! சௌதாமினி, சௌதாமினி தியாகராஜனானதைக் கண்டு, களித்து, வியந்து, கவலைப்பட்டார்கள். ‘கல்யாணத்துக்கப்பறமும் பாட விடுவானா...?’

ரிசப்ஷனில் கால் கடுக்க நின்று, தாடை வலிக்கச் சிரித்த பிறகும் தியாகராஜன் சோர்வின்றி இருந்தான். சௌதாமினியின் அண்மையே விருந்தாய் இருந்தது.

“அவசியம் அமெரிக்கா போய்த்தான் ஆகணுமா?...”

“அதுக்குத்தான் இன்னும் மூணு மாசம் இருக்கே தியாகு... இப்பவே ஏன்...?”

“இன்னும் மூணு மாசம் கழிச்சு உன்னை முழுசா மூணு மாசம் பிரியணுமே...”

“இன்னிக்கு அதைப் பத்தி நினைப்பானேன்...”

“அடிக்கடி பிரியணுமே...?”

“அதுக்குத்தான் ஒரு ஐடியா பண்ணியிருக்கேன்...”

“என்ன...? கூடவே நானும் வந்துடவா?”

“அய்யோ! நோ. அப்புறம் இன்னிக்கு மாதிரி தினமும் தூங்க விடாம... அதைவிட பெட்டர் ஐடியா...”

“சொல்லு...” அணைப்பை விடுவிக்காமல் கேட்டான்.

“சீக்கிரமா ஒரு குட்டிப் பொண்ணைப் பெத்து உங்க கையிலே குடுத்துடறேன். அப்புறம் உங்களுக்குப் பொழுது போகலைன்னு சொல்லக்கூட நேரமிருக்காது.”

“உன்னை மாதிரியே இப்படி சொப்பு வாயும் சிமிழ் சிமிழா கண்ணும்... இட்ஸ் எ டீல்! எப்போ பெத்துத் தரே...?”

“நிச்சயமா அமெரிக்கா போயிட்டு வந்தப்புறம்தான்.”

“அமெரிக்கா ஆடியன்ஸை அப்படியே அசத்திடணும் நீ, சௌதாமினி...”

“என்ன அமெரிக்கா ஆடியன்ஸ்? எல்லாம் நம்ம மனுஷங்கதான்...”

“அதனால என்ன? பாட்டே கேட்காம ஏங்கிப் போயிருப்பாங்க. நீ வேணா பாரேன்... இந்த அமெரிக்கா டூர் உனக்கு ஒரு புது அந்தஸ்தைக் குடுக்கப் போகுது...”

அந்தஸ்து! சௌதாமினியின் வாழ்க்கையில் முயற்சியின்றி நுழைந்த இலவச இணைப்பு! ஆரம்பக் கட்டத்தில் அவள் பயந்தாள்.

தங்கக் கம்பியாக ஒத்துழைத்த குரலில் மயங்கிய ரசிகர்கள். அவள் தொண்டையைச் செருமினால்கூட ‘ஆஹா’ என்று வியந்த மூத்த தலைமுறை. ‘இவ்வளவு இளமையை வீணடிப்பதாவது’ என்று மகா பொறுப்புணர்ச்சியுடன் போட்டி போட்டுக் கொண்டு ‘தூக்கி விட்ட’ மீடியா... ‘Music-based’ கதைதான்மா...’ என்று பிரபல இயக்குனர் நடிக்க அழைத்தபோது மறுக்க வேண்டியிருந்தது. கால்ஷீட் கொடுக்க அனுமதிக்காமல் ஒரு வருஷத்து டைரியை நெருக்கிய கச்சேரிகள். மேடைக்கொரு புதுப் புடைவையை சாத்தியமாக்கிய சம்பாத்தியம்.

“அதே மாதிரி ஒவ்வொரு கச்சேரிக்கும் ஒரு புதுப்பாட்டு வேண்டாமா, சௌதாமினி...” பவித்ராதான் கேட்கத் துணிந்தாள்.

“வேணும்தான்... நேரமில்லையே பவித்ரா. கத்துக்க, சாதகம் பண்ண...” குற்ற உணர்வுடன் அப்போது பதில் சொன்னாள்.

புன்னகை உத்வேகமாக, புகழ் ஊர்வலமாக வாழ்க்கை ஓட, ஓட, குற்ற உணர்வும் ஓடிப் போய்விட்டது.

தற்போது சௌதாமினி தியாகராஜன் – இன்னொரு அந்தஸ்து! அமெரிக்கா பயணம் வேறு புது அந்தஸ்து தரும் என்கிறான் தியாகு.

“என்னைக் கல்யாணம் பண்ணிக்கிட்ட வேளைதான்னு எல்லாரும் சொல்லுவாங்க, பாரேன்...”

– தியாகராஜன் வெள்ளையாகப் பேசியது மனத்தைத் தொட்டது.

“தாங்க் யூ தியாகு.”

“என்னிக்குக் கிளம்பணும்னு சொன்னே...?”

“ஏப்ரல் இருபத்தெட்டு...”

“நாள் ஓடிடும்...”

ஓடிய காலம், ஏப்ரல் இருபத்தைந்து அன்று அப்படியே ஸ்தம்பித்தது. சௌதாமினி பிழியப் பிழிய அழுதாள். தியாகராஜன் விசிறிவிட்ட தணலாகக் கோபத்தில் முகம் சிவந்தான்.

(தொடரும்)

# ஸ்பான்சர் செய்யுங்கள்; சாதித்துக் காட்டுகிறோம்!

• சுதாஷா

**ஹீ**ரோ ஹோண்டா 6வது உலகக் கோப்பைக்கான பெண்கள் கிரிக்கெட் போட்டி இந்தியாவில் டிசம்பர் 9 முதல் நடந்து கொண்டிருக்கிறது. இந்தியாவின் வெற்றி எந்த அளவு உள்ளது? என்று முன்னாள் இந்திய பெண்கள் கிரிக்கெட் அணியின் கேப்டனும் தற்போதை அணியின் அமைப்புச் செயலாளருமான சுதாஷாவிடம் கேட்டோம்.

"நம் அணி நல்ல, வலிமையான அணி. நிச்சயம் அரை இறுதியில் இடம் பெறுவோம். கொஞ்சம் முயற்சி செய்து விளையாடினால் பைனலிலும் நுழைய முடியும். அதன் பின் அதிர்ஷ்டம் இருக்கும் பட்சத்தில் கோப்பையை வெல்லலாம்."

"இந்திய அணியில் யார் யார் நன்றாக விளையாடுவார்கள் என எதிர்பார்க்கிறீர்கள்?"

"இந்தியாவின் கேப்டன் பிரமிளா பட் மிகவும் திறமையாக ஆடக்கூடிய ஆல்ரவுண்டர். 95ல் இங்கிலாந்து அணிக்கு எதிராக மிக நன்றாக ஆடியவர். மற்றும் அஞ்சு ஜெயின், (விக்கெட் காப்பாளர் மற்றும் துவக்க ஆட்டக்காரர், சங்கிதா டபீக (இடது கை ஆட்டக்காரர், இடது கை ஸ்பின்னர்) பூர்ணிமா ராவ் (அதிரடி ஆட்டக்காரர்) அஞ்சும் சோப்ரா (இடது கை ஆட்டக்காரர்) இவர்கள் நிச்சயம் தங்கள் திறமைகளை உலகிற்கு வெளிப்படுத்துவார்கள். அணியில் உள்ள மற்றவர்களையும் சாதாரணமாக எண்ணக் கூடாது. அவர்களும் திறமைசாலிகள் தாம்."

"தமிழகத்திலிருந்து அணியில் ஏன் யாரும் இல்லை?"

"யாரும் சரியாக விளையாடவில்லை. எனவே தேர்வு செய்யப்படவில்லை."

"ஒரு காலத்தில் நீங்களே இந்திய அணியின் கேப்டன். மற்றும் சுமதி அய்யர் போன்று நான்கு பேர் இருந்தனர். இன்று ஒருவர்கூட இல்லாதது வருத்தமாக இல்லையா? ஏன் இந்த நிலை?"

"கஷ்டமாகத்தான் உள்ளது. ஆனால் பெண்கள் கிரிக்கெட்டை யாரும் ஆதரிக்க முன்வரவில்லை. இன்று கிரிக்கெட் மட்டையும், பந்தும் மற்றும் ஏனைய பொருள்களும் விற்கிற நிலையில் யாராவது ஸ்பான்சர் செய்யாவிட்டால் கிரிக்கெட் விளையாட முடியாத நிலை வந்துள்ளது. யாராவது கல்லூரியிலேயே சிலரை 'அடாப்ட்' செய்தால்தான் இங்கு பெண்கள் கிரிக்கெட் வளரும். நான் பொறாமையால் சொல்லவில்லை. ஆண்கள் கிரிக்கெட்டிற்கு 'ஸ்பான்சர்' செய்வதில் கால்வாசியாவது கொடுத்தாலே போதும்! இங்கு மட்டுமல்ல; இந்திய மகளிர் அணியே நிச்சயம் சாதனை புரியும்!"

— நந்தினி



1997 டிசம்பர் 21
ஈசுவர மார்கழி 6
மலர் : 56
இதழ் : 21

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## பழைய கூட்டணி; புதிய உத்வேகம்!

தமிழகம் நிம்மதிப் பெருமூச்சு விடுகிறது!

தி.மு.க. - த.மா.கா. உறவு, ஆரம்பகால உற்சாகத்துடன் தொடரும் என்று தி.மு.க. தலைவர் கருணாநிதி அறிவித்துவிட்டார். மூப்பனாருடன் தொலைபேசியில் உரையாடிய பிறகு இந்த அறிவிப்பு வெளியிடப்பட்டிருக்கிறது. ஆற்காடு வீராசாமி நேரில் சென்று மூப்பனாருடன் பேசிய பின் மனவேறுபாடுகள் களையப்பட்டு விட்டன என்றும், இரு கட்சிகளிலுமே தலைமை மட்டத்தில் எந்தவித பிரச்னையும் இருக்கவில்லை என்றும் கருணாநிதி அடித்துச் சொல்கிறார்.

ஜெயின் கமிஷன் இடைக்கால அறிக்கை விவகாரம் வெடித்தபோது, தமது ராஜீவ் - சோனியா விச்வாசத்தை நிரூபிக்கும் விதமாக மூப்பனார் நடந்துகொள்ளவேண்டியிருந்தது. தி.மு.க.வை விலக்குவதற்கில்லை என ஐக்கிய முன்னணியின் இதர கட்சிகளைப் போல் த.மா.கா. உறுதியாகச் சொல்லவில்லை. இந்தப் பின்னணியில் மூப்பனாருக்கு ஓரளவு தர்மசங்கடம் ஏற்பட்டதை மறுக்க முடியாது. கூட்டணி தொடரும் என்று அவரால் பளிச்சென்று கூற முடியவில்லை.

தி.மு.க.வோ தனது நிலைகுறித்து மறுபரிசீலனை செய்ய வேண்டிவரும் என்றது. 'அவர்கள் ஆலோசித்து முடிவு சொல்லட்டும் பிறகு பார்க்கலாம்' என்றார் மூப்பனார்!

இருதரப்பினரும் சில நாட்கள் கண்ணாமூச்சி ஆடி கதிகலங்கச் செய்தபோது, மும்முனைப் போட்டியினால் ஜெயலலிதாவின் கை ஓங்கி விடுமே என்ற கவலை தமிழகத்தில் மேலிட்டது.

புதுப் புது கூட்டணிகள் குறித்து ஹேஷ்யங்களும் வதந்திகளும் செய்தித்தாள்களை நிரப்பின.




இப்போது எல்லா ஈகோ ஜுரமும் ஓய்ந்து, நடைமுறைக்கு எது உகந்தது என்பதுடன் நாட்டுக்கு எது நல்லது என்பதையும் தலைவர்கள் உணர்ந்திருக்கிறார்கள்.

ஒரு நல்ல முடிவு அறிவிக்கப்பட்டிருந்தாலும் தொண்டர்கள் மட்டத்தில் மனக்கசப்பும், ஒத்துழையாமையும் நிலவ வாய்ப்பிருக்கிறது. அதைத் தூண்டுவதற்கென்றே விஷமிகள் ஏவப்படவும் வாய்ப்பிருக்கிறது.

கடந்த தேர்தலின்போது தி.மு.க. - த.மா.கா. உறவை பலப்படுத்த உணர்வுபூர்வமான காரணங்கள் இருந்தன. இன்று அவை இல்லாத நிலையில், மேல்மட்ட தலைவர்கள் தங்கள் ஒவ்வொரு செயலிலும் சொல்லிலும் அந்த இணக்கத்துக்கு முயற்சி செய்ய வேண்டும். அப்போதுதான் தொண்டர்களுக்கு உற்சாகமூட்டி அவர்களது உழைப்பைப் பெற முடியும். பழைய கூட்டணிதான்; ஆனால் புதிய உத்வேகத்துடன் செயல்பட வேண்டும்.

கருணாநிதியும் மூப்பனாரும் விரைவிலேயே ஒரே மேடையில் தோன்றி, மக்களைச் சந்திப்பது நல்லது!

## மழையால் சேதம்; கோடிகள் விரயம்!

யுத்த கால அடிப்படையில் நிவாரணப் பணிகளை மேற்கொள்ளப் பணித்துள்ளார் தமிழக முதல்வர். இடைவிடாது பெய்த பருவமழையால் தமிழ்நாட்டில் ஏற்பட்டிருக்கும் சேதம் 176 கோடி ரூபாய் அளவுக்கு இருக்கும் என மதிப்பிடப்பட்டுள்ளது!

காவிரிப் பாசன மாவட்டங்கள் மூன்றில் மட்டும் நிவாரணப் பணிகளுக்கு 42.5 கோடியை ஏற்கெனவே அரசு ஒதுக்கிவிட்டது!

இந்த மழை நடவடிக்கைகளும் நிவாரணப் பணிகளும் இன்றையச் சூழலுக்கு அத்தியாவசியமாகத் தோன்றலாம். ஆனால், இதனால் பிரச்னைக்கு நிரந்தரத் தீர்வு காண முடியாது. திரும்பத் திரும்ப




இதுபோன்ற பெருந்தொகைகளை வறட்சி நிவாரணம், வெள்ள நிவாரணம் எனறு மாறி மாறி செலவிட்டுக் கொண்டேயிருக்க நேரும்.

மத்திய அரசிடம் மானியம் கோரி, கோடி கோடியாய் நிவாரணப் பணிகளுக்குச் செலவிடுவதற்குப் பதிலாக, வருமுன் காக்கும் பணிகளுக்குச் செலவிட்டிருந்தால் இவ்வளவு சேதம் விளைந்தே இராது.

பருவ மழையினால் வெள்ளப் பெருக்கு ஏற்படுவது என்பது புதிய நிகழ்வல்ல. உதாரணமாக, செம்பரம்பாக்கம் ஏரி நிரம்பிப் போவதும், அதன் கரை உடைப்பைத் தவிர்க்க, ஏரி மதகுகள் திறந்து விடப்படுவதும், உபரிநீர் அடையாறு நதியில் ஓடி, சென்னை நகரின் தாழ்வான பகுதிகளை மூழ்கடிப்பதும் ஏற்கெனவே பலமுறை நடந்துள்ள நிகழ்ச்சித் தொடர்.

அந்த அனுபவங்களிலிருந்து பாடம் கற்று, ஏரிகளைத் தூர் வாரி, ஆழப்படுத்தி, அவற்றின் அருகே உபரி நீரைத் தேக்கும் விதமாகக் கீழ்மட்டத்தில் புதிய ஏரிகளை அமைத்து, கால்வாய்களின் கரையை பலப்படுத்தி வெள்ளம் வராமல் தடுக்க முடியும்.

ஆனால், எந்த அரசுமே இதுபோன்ற முன்னெச்சரிக்கைப் பணிகளில் ஆர்வம் காட்டுவதில்லை. இயற்கைச் சீற்றங்கள் ஓய்ந்த பிறகு மக்கள் தவிப்பான நிலையில் இருப்பதைச் சாதகமாக்கிக் கொண்டு, மத்திய அரசின் உதவியையும் பெற்று, ஏராளமான தொகைகளை அவை மீண்டும் மீண்டும் செலவிடுகின்றன. எல்லா தொகையுமே உடனடி சாலைச் சீரமைப்பு, பயிர்ச்சேத நஷ்டஈடு, பாலம் செப்பனிடல் போன்ற தாற்காலிகப் பணிகளில் கரைந்து போகிறது.

அதிலும் எவ்வளவு தொகை நியாயமாய்ப் போய்ச் சேர வேண்டியவர்களுக்குப் போய்ச் சேருகிறது என்பதைப் பார்த்தால், அதிர்ச்சியே ஏற்படும். நிவாரணப் பணிகள், லஞ்ச-லாவண்யத்துக்கு வழிவகுப்பது ஒருபுறமிருக்க, பணிகள் பரவலாக முடிவதற்குள் மீண்டும் சீரமைக்கிற அளவுக்குச் சாலைகள் மோசமாகி விடுகின்றன; அல்லது மீண்டும் பருவமழை ஆரம்பமாகி விடுகிறது!

அடுத்த பருவ மழை ஆரம்பிப்பதற்குள் நிரந்தர நிவாரணப் பணிகள் சிலவற்றைத் திட்டமிட்டு நிறைவேற்றுவோம் என்று முதல்வர் உறுதியளித்தால், அதுவே தலைசிறந்த நிவாரணமாக அமையும்!



சமையல் கட்டுக்கே போகமாட்டேன்னு இருந்த வைராக்கியக் கோட்டைத் தாண்டும்படியா ஆயிடுச்சு சமீபத்துல. "உன்னை கட்டிக்கிறேன்னு எவனுக்கும் துணிச்சல் வராதுதான். அப்படி வந்திட்டா என்னடி பண்ணுவ?"ன்னு சொல்லி ஓங்கி சிரிச்சா, பிரேமி. அப்பத்தான் மண்டையில ஒரச்சது. 'அடடா, வர்ற ஆளுக்கு சமைக்கக் கத்துக் கொடுத்திட்டு நாம ஒதுங்கணுமில்லையா?' அதுல ஆரம்பிச்சது என் சமையல் கலை!

பச்சரிசிய மூணுக்கு நாலுதடவ கழுவிக் கழுவி பாலிஷ் ஏத்துவாங்க எங்க பாட்டி. ததும்பத் தண்ணிய ஊத்தினதால கஞ்சியா கொதகொதன்னு கொதிக்கும்! பாட்டி வடிச்செடுத்த பின்னாடி, சோறு வெள்ள வெளேர்ன்னு இருக்கும். இதுதானா சமையல்ன்னு நானும் கோதாவில எறங்கினேன். நான் ஜமாய்க்கிறதா நெனச்சு, பிரேமிகிட்ட சொன்னேன். சிரிச்சா பாருங்க ஒரு சிரிப்பு!

"புருசனைக் கொல்றதுக்கு இதவிட பெஸ்ட் ஐடியா இல்லடி"ன்னா. அப்புறந்தான் புரிஞ்சது, அரிசியைக் களைஞ்சிட்டே இருக்கறதால 'பி'விட்டமின் பூராவும் வேஸ்டா போயிடற விஷயம்!

துலக்குத் துலக்குன்னு அரிசிய தண்ணியில பாடா படுத்துனா, சத்தெல்லாம் தண்ணியில எறங்கிடும். அதுக்கு மேல வடிக்கிறதில, மிச்சமிருக்கிற சத்தும் போயிடும். நாம சாப்பிடறது கடைசியில சக்கைதான்! ஒரு தடவை கழுவினா போதும். தண்ணிய வடிகட்டாத அளவு குறைச்சலா ஊத்தி சோறுகாண வைக்கிறதில சத்து வெறியேறறதில்லை. புழுங்கலரிசி, பயமுறுத்துறது மாதிரி இருக்கிறதால முகத்தச் சுளிக்க வேணாம். பச்சரிசியவிட பெட்டர்தான்! புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர் கைக்குத்தலரிசி சாப்பிட்டு வந்ததால்தான் ஆரோக்கியமா

இருந்தாராம். கைக்குத்தலரிசி தயாரிக்க நேரமில்லங்கிறது எனக்கும் தெரியுது. அரிசிக்கும் மேலான சரக்கு நம்ம கைவசம் இருக்கு! என்னன்னு கேக்கறீங்களா கேழ்வரகு!

பண்ணி டின்ல போட்டு வையுங்க. குழந்தைகள் எதாவது பண்ணிக்கொடுன்னு அடம்பிடிச்சா தோசையாவோ பணியாரமாவோ இதையே பண்ணித் தரலாம்.

# 'தமிழ் பூஸ்ட்' குடியுங்கள்!

கேழ்வரகைப் பாத்ததும், 'இதை எவன் சாப்பிடுவான்னு' எழுந்து போக வேணாம். உண்மையில தானியத்திலேயே ராஜா அதுதான்னு சொல்றாங்க விஜயாவும் அமுதாவும்! அதுல இரும்பும் கால்சியமும் அதிகமாக இருக்கு. திரண்ட புஜமும் நீண்ட ஆயுளுமா கிராமத்தார்கள் இருக்கக் காரணம் கேப்பைக்கூழ் சாப்பிடுறதுனாலதான்!

களிகிண்டுறது வெக்கமா இருக்கா? சரி. அப்ப ஒண்ணு பண்ணலாம். கேழ்வரகு, கம்பு ரெண்டையும் ஊற வச்சு துணியில கட்டி வச்சிடுங்க. முளை விட்டதும் எடுத்து பொட்டுக் கடலை, கொஞ்சமா வெல்லம் போட்டு தினமும் சாப்பிடுங்க! அதுல புரோட்டின் அதிகமாக இருக்கு. இல்லன்னா, கேழ்வரகு மாவுல தண்ணிய ஊத்திப் பிழிஞ்சு பால் எடுங்க. அந்தப் பாலை ஆளுக்கு ஒரு தம்ளர் கண்ணை மூடி மடக் மடக்குன்னு குடியுங்க. எலும்பு வலுவாகும்!

வெல்லம், வேர்க்கடலை, கேழ்வரகு மாவு எல்லாத்தையும் கலந்து வரகுருண்டை பண்ணி வச்சுக்கிறதும் சுலபம்தான். கம்பு, கேழ்வரகு, குதிரைவாலி, சோளம்... இப்படி சாத்தியமாகிற மாவு வகைகளை சம விகிதத்தில் கலந்து 'தமிழ் பூஸ்ட்'

உடம்புல இன்சுலின் கம்மியா இருக்குறவங்களுக்கு சக்கரை வியாதி வரும். சும்மா மூணு வேளையும் சாப்பாடா கொட்டிக்கிட்டா இன்சுலின் எப்படி சுரக்கும்? அரிசியோட கோதுமை, கேழ்வரகு மாவிலயும் கொஞ்சம் கவனம் வையுங்க.

காய்ச்சல் வந்தா சாப்பாடு வேணாம்னு சொல்றதுக்குக் காரணம் இருக்கு. அணுக்கள், காய்ச்சலை வெளியேத்த, எதிர்ப்பு சக்தியைக் கொடுத்து போராடிக்கிட்டிருக்கும். அந்த சமயத்துல அரிசி சாப்பாடுன்னா ஜீரணத்தையும் கவனிக்க வேண்டி இருப்பதால செல்கள் சோர்ந்து போயிடும்! கஞ்சி மாதிரி வச்சு குடிப்பீங்க. அதவிட சூப்பர் சரக்கு இருக்கு. 'தமிழ் மிக்ஸிங்' மாவ ஏற்கெனவே சொன்னேனில்லையா. அந்த மாவுல தண்ணி சேர்த்து அப்படியே வடிகட்டி அந்தச் சாறை எடுத்து சூடு பண்ணி சூப் மாதிரி குடியுங்க. நீங்க மட்டுந்தான் சாப்பிடணும்னு இல்ல. உங்க குழந்தைகளுக்கும் கொடுங்க. செல்களுக்கு சத்து சேரும்! காய்ச்சல் காணாமப் போயிடும்! ●

– சுமி

அடையாறு ஆற்றில் வெள்ளம் வந்தால், குடிசைகளுக்கு மேல்நீச்சல் மட்டுமே பழக்கிக் கொடுத்து விட்டுப் போய் விடும். இந்த ஆண்டு உள்நீச்சலையும் பழக்கிக் கொடுத்து விட்டது! கூரையின் முகடு மட்டும் தெரிய, குடிசையின் முழு உடலும் ஆற்றில் முங்கித் தத்தளிப்பதை ஈக்காடு தாங்கல் மேம்பாலத்திலிருந்து மக்கள் கண்டுகளித்தனர். மேம்பாலம் திடீர் பிக்னிக் ஸ்பாட்டானதால் சென்னை மக்கள் குழந்தை குட்டிகளோடு வாகனத்தில் வந்து இறங்கினர். சும்மா பழைய கார்க் கதவைப் புரட்டிக் கொண்டு போவதை மட்டும் பார்த்தால் நன்றாகவா இருக்கும்? கொறித்துக் கொண்டே பார்க்க வேண்டுமல்லவா? வேர்க்கடலை, வாழைப்பழம், ஐஸ்கிரீம், வியாபாரம் படு சுறுசுறுப்பாக நடந்தது.

ஜாபகர்கான்பேட்டை மக்கள் பாலத்துக்கு வரக் கொடுத்து வைக்கவில்லை. வெள்ளம் பேட்டைக்குள் நுழைந்து கீழ்த் தளங்களில் குடியேறி விட்டதால், மாடியில் இருந்து மக்கள் பார்த்தனர். இரண்டு பன்றிகள் ஆளுயர நீரில் நீந்தி வலம் வந்து கொண்டிருந்தன. ஒருகாலத்தில் இந்த இடங்களிலெல்லாம் பரவிப் போயிருக்கிறேன். என் இடத்தை நீங்கள் மறித்தால் நான் சும்மா இருக்க முடியுமா? என்று தன் பலத்தைக் காட்டி விட்டுப் போனது வெள்ளம்.



• ஈக்காடுதாங்கல் மேம்பாலத்தில் வெள்ளம் பார்க்கும் மக்கள்

திடுதிடு மழையில் கே. கே. நகர் பிரதான சாலையில் இடுப்பளவு நீரில் தெருவோரவாசிகளின் குழந்தைகள் எதிர்நீச்சல் போட்டனர்.

நுங்கம்பாக்கம் மேம்பாலம் கட்டுவதன் முக்கியத்துவத்தை ஆட்சியாளருக்கு உணர்த்த, வெள்ளம் கடலாகப் பாய்ந்தது! சூளைமேட்டுக்கும் பச்சையப்பன் கல்லூரிக்கும் இடையில் போக்குவரத்தே இல்லாமல் ஆக்கியிருந்தது.

அசோக் பில்லரில் இருந்து அம்பத்தூர் போக நான்கு மணி நேரம் ஆகிறது என்று அலுத்துக் கொள்வது இருக்கட்டும். வடபழனியில் ராவுத்தர் பிலிம்ஸ் இருக்கிற பக்கம் போக வேண்டுமானால் போட் விட வேண்டும். 'செல்ப்' எடுக்காமல் போன வண்டிகளைத் தள்ளுவதற்கே சிறார்களின் கூட்டம் ஓடிக் கொண்டிருந்தது. 'பரவாயில்லையே, வண்டிகளைத் தள்ளிக் கரைசேர்க்கும் இந்தச் சிறார்களுக்கு மனிதாபிமானத்தை யார் சொல்லிக் கொடுத்தது' என்று கேட்க வேண்டாம். மேடேறியதும் 50, 100 ரூபாய் இல்லாமல் வண்டி நகராது. நடைவண்டி பழகும் குழந்தைகள் எல்லாம் திருப்புளியை வைத்துக் கொண்டு, "சார் நான் ஸ்டார்ட் பண்ணித் தரட்டுமா" என்று மறித்துக் கொண்டிருந்தனர். நூறடி ரோடு குழந்தைகளுக்கு மூன்று நாட்களாக நல்ல வருமானம். ஆனால் பாவம், ராவுத்தர் பிலிம்ஸ் குளத்துக்குள் நின்று போன பல்லவனைத் தள்ள ஆளில்லாமல் நின்றிருப்பதைப் பார்க்கத்தான் பரிதாபமாக இருந்தது!

சும்மா இருந்த மாரியம்மனை எம்.எம்.டி.ஏ. காலனி ரோடில் தூக்கி எதுக்கு வைத்தார்கள்? மூச்சுவிட முடியாமல் முங்கிக் கொண்டிருந்தது பரிதாபம்தான்! மாரியம்மன் கிரீடத்தில் தலையை ஆட்டிக் கொண்டிருந்த

# வெள்ளம்

ஓணானின் இண்டலுக்குத்தான் அலை வில்லை.

கோயம்பேடு ஆற்றோரத்தில் இருக்கும் முன்னூறு குடிசைகளும் ஆற்றில் தியானம் செய்தன. மக்கள் கடைகளிலும், மாநகராட்சிப் பள்ளிகளிலும் நெருக்கிக் கொண்டிருந்தனர்.

கோயம்பேடு நகராட்சிப் பள்ளிக்குள் அடைந்து கிடந்த மக்கள் "ஒரு ட்ரம் சாப்பாடு வருதுங்க. பக்கத்தில தங்கியிருக்கிறவங்களுக்கு பகிர்ந்து கொடுத்திடுறாங்க. பத்த மாட்டேங்குது" என்றார்கள்.

இன்னொரு குழுவாக இருந்தவர்கள், "மேலிடத்திலிருந்து உத்தரவு இல்லாம நா ஸ்கூலத் திறந்து விட முடியாதுன்னு ஹெட்மாஸ்டர் சொல்றாரு. எங்களுக்கு சாப்பாடு கூட வேணாம் சார். தங்குறதுக்கு எடம் கொடுத்தாப் போதும்" என்றனர்.

"சாப்பாடு காலை பதினோரு மணிக்குத்தான் வருது. அப்புறம் ராத்திரி பத்து மணிக்கு வருது. அப்போ குழந்தைகள் எல்லாம் தூங்கிடுறாங்க" என்றனர் கோயம்பேடு மக்கள்.

கோயம்பேடு தி.மு.க. செயலாளர் எஸ்.பி. முருகேசன், பொதுமக்களின் எல்லா திட்டுகளையும் வாங்கிக் கொண்டு முடிந்தளவு, வரும் உணவைப் பகிர்ந்தளித்துக் கொண்டிருந்தார். "எங்க தலைவருக்குக் கெட்ட பேரு வந்திடக் கூடாதுன்னு ஓடி ஓடி செய்றோம். மக்கள் சொல்ற குறையெல்லாத்தையும் நா ஒருத்தன் தீர்க்க முடியுங்களா?" என்றார்.

நட்டநடு ஆற்றுப் பகுதியில்தான் கோயம்பேடு நியூ காலனி மக்களின் சுடுகாடு இருக்கிறது. 'இந்த மழையில் பெரிசுகள் யாராவது மண்டையைப் போட்டு விட்டால்...?' என்று விபரீதமாகச் சிந்திக்கின்றனர்.

"கூரை வீட்டுக்கு 500 ரூபா வெள்ள நிவாரண நிதி தர்றாங்க. ஓடு போட்டிருந்தா உதவி தர மாட்டேங்கிறாங்க. பணத்த, குடிச்சு சீரழிக்காம மிச்சம் பிடிச்சு ஓடு போடுற வீட்டுக்காரங்களுக்கு அந்த 500 ஏன் தரக்கூடாது?" என்று கேட்கின்றனர்.



கோயம்பேடு ஆற்றங்கரையோரம் சுற்றுச் சுவர் எழுப்பினால் வெள்ளம் வராது. வருடா வருடம் வெள்ளம் நுழைந்து விடுவதால் மண்சுவர் அப்படியே கரைந்து, கூரை உட்கார்ந்து கொள்கிறது என்கின்றனர். ○

— அம்மாபட்டி ஜம்பு

படங்கள் : யோகா

# வந்தது, வெள்ளம்!

# ஆளையே சாப்பிடுதே ஐயா!

✉ 'வம்புக்கு வழிவகுக்கும் வாசகங்கள்' என்று நீர் வருத்தப்பட்டு எழுதிய நேரம், கோவையில் வம்பெல்லாம் தாண்டி தும்பறுத்துக் கொண்டு சமூக விரோதிகள் அக்கிரமம் செய்து இருக்கிறார்கள். மனம் ரத்தக் கண்ணீர் வடிக்கிறது.
சேலம்-6, என். தாமோதரன்.

✉ தலையங்கம் மிகவும் அருமை. இந்தச் சூழ்நிலையில் ஒவ்வொருவரும் செயல்பட வேண்டிய விதத்தைக் கூறியதோடு கடைசியாக, மக்களும் தங்கள் வாக்குரிமையைப் பொறுப்போடு பயன்படுத்தி ஸ்திரமான நல்லாட்சிக்கு வழி வகுக்க வேண்டும் என்று எழுதியிருப்பது, மிக மிக அவசியமானதாகும்.
திருப்பரங்குன்றம், டி.கே. சுப்பிரமணியன்.

✉ சிதம்பரம் தொகுதி பற்றிப் படித்தேன். சிதம்பரம் நகரின் அவலங்களை அக்குவேறு ஆணி வேறாக அலசியிருந்தீர்கள். தங்கள் பத்திரிகையின் மூலமாவது தொகுதி மக்களுக்கு விடிவு காலம் ஏற்பட்டால் நல்லது. சிங்கார சிதம்பரமாக இல்லாவிட்டாலும் சீரழிவு இல்லாத நகரமாகவாவது விளங்கினால் அதுவே போதும். தங்கள் பணி தொடரட்டும்.
சிதம்பரம்-1, துளசி கணபதி.

✉ இட்லி, சாம்பாரைவிட 'பிட்ஸா' சாப்பிட நன்றாக இருந்தாலும், விலையைக் கேட்கும் போது ஆளையே தூக்கிச் சாப்பிட்டு விடுகிறதே! ஆனாலும் சுவையான கட்டுரை.
திருச்சி-18, அம்மனூர் என். சாம்பமூர்த்தி.

✉ கல்கி 7.12.97 இதழில் 'இட்லி, சாம்பாருக்கு இத்தாலிய எதிரி' - கவர் ஸ்டோரி கண்டேன். மகிழ்ந்தேன். விவரங்கள் அனுப்பிய என் பெயர் விடுபட்டுப் போன 'மர்மம்' என்னவோ?
சென்னை-14, கலைடாஸ்கோப்.
('கலைடாஸ்கோப்' எழுதி அனுப்பிய விவரங்களில் சிலவற்றை மட்டுமே வாசகர் யோசனையாக ஏற்று, அதன் அடிப்படையில் வேறு பல தகவல்களும் சேகரித்து 'கவர் ஸ்டோரி' தயாரிக்கப்பட்டது. - ஆர்)

✉ ராபின்சிங் ஓரங்கட்டப்படாமல் வாய்ப்பு கொடுத்திருந்தால் கேப்டன் ஆகி இருக்கக் கூடியவர் என்ற கபில்தேவின் கருத்து சிந்திக்க வேண்டிய விஷயம். வாரா வாரம் ஒரு கிரிக்கெட் வீரரைப் பேட்டி கண்டு அசத்தி விடுகிறீர்கள்.
சென்னை-78, வி.எஸ். அனந்தராமன்.

✉ 'விடுகதை'யின் விடை, திரைப்படத்துக்கு வேண்டுமானால் சரியாக இருக்கலாம். நடைமுறை வாழ்வில் விபரீதங்களுக்குத்தான் வழி காட்டும் என்ற டாக்டர் விஜயகுமாரின் கருத்து போற்றுதற்குரியது. திரைப்படப் படைப்பாளிகள் இனியாவது சமூகப் பொறுப்புணர்வுடன் செயல்படட்டும்!
மதுரை, வி.பி. மகராசி.

✉ உமது சிந்தனையில் பூத்த புரட்சிகரமான தேர்தல் பிரசார யோசனைகளைக் கையாண்டு 'பலன்' கண்டாலும் ஆச்சரியமேதுமில்லை... அந்த மாதிரி ஆசாமிகள் ஆச்சே நம்ம அரசியல்வாதிகள்...!
குடந்தை, ஆர். ஷம்மு.

✉ 'தமது அரசு திறந்த அரசாக இருக்கும்' என்று கூறிக் கொள்ளும் முதல்வர் இதோ இந்த விஷயங்களிலும் உண்மை நிலவரங்களை வெட்ட வெளிச்சமாக்கட்டுமே!

1) தெலுங்கு கங்கைத் தண்ணீர் வந்து விட்டதாக விழா நடத்தியாயிற்று. நிஜமாகவே தண்ணீர் வருவது என்று?

2) மேயர் திறந்து வைத்த மண்ணெண்ணெய் விநியோக நிலையங்களில் எத்தனை இடங்களில் போன உடன் மண்ணெண்ணெய் கிடைக்கிறது?

3) வண்ண வண்ண ரேஷன் கார்டுகள் முதல்வர் பிடித்திருக்க, விநியோகம் ஆரம்பித்து விட்டதாகப் பத்திரிகைச் செய்திகள். ஆனால் உண்மையில் புதிய கார்டுகள் விநியோகம் நடக்கவில்லை.

அனைத்து மக்களையும் நேரடியாகப் பாதிக்கும் இந்த விஷயங்களிலாவது, முதல்வர் ஏற்கெனவே உறுதி கூறியபடி உண்மையாக நடந்து கொள்வாரா?
சென்னை-1, எஸ். துரைக்கண்ணன்.

✉ அருண்சரண்யாவின் ஒன்..டூ... த்ரீ கதைகள் முப்பரிமாண அசத்தல்கள். பாராட்டுக்கள். ○
வேலூர்-4, வடமாலவன்.

## வட்டமேஜை

முன்பெல்லாம் உடல் ஊனமுற்ற குழந்தைகள் பயன்படுத்தி வந்த ஊன்றுகோல்கள் கடினமான உலோகத்தால் செய்யப்பட்டு வந்தன. கரிப்பொருள் - கரிப்பொருள் கலவையைப் பயன்படுத்தி 'அக்னி' ஏவுகணை தயாரிக்கப்பட்டபோது இதையே ஊன்றுகோல் தயாரிக்க ஏன் பயன்படுத்தக் கூடாது என்ற எண்ணம் டாக்டர் கலாமிற்கும், அவரது குழுவினருக்கும் ஏற்பட்டதாம். உதாரணமாக நான்கு கிலோ எடையுள்ள உலோகத்தின் எடையில் பத்தில் ஒரு பங்கு எடைதான் கரிப்பொருள் - கரிப்பொருள் கலவையைப் பயன்படுத்தித் தயாரிக்கும் கருவிகளுக்கு உண்டு.



"உடல் ஊனமுற்ற குழந்தைகள் இந்த இலகுவான உலோகத்தால் தயாரிக்கப்பட்ட ஊன்றுகோல்களைப் பயன்படுத்தி நடப்பதைப் பார்த்து பெற்றோர்கள் அடைந்த மகிழ்ச்சிதான் என் வாழ்க்கையிலேயே நான் அனுபவித்த மகிழ்ச்சியாகும்" என்று சொல்லும் டாக்டர் அப்துல் கலாமிடம் இந்தியாவின் முதன்மையான 'பாரத ரத்னா' விருது வழங்கப்பட்டிருப்பதாக சொன்ன போது தன்னுடைய பெற்றோர்களைத்தான் முதலில் நினைத்துக் கொண்டாராம்.

"பின்னர் என்னுடைய ஆசிரியர்கள், விக்ரம் சாராபாய் விண்வெளி ஆராய்ச்சி மையத்தில் என்னுடைய சக விஞ்ஞானிகளையும், ராணுவ ஆராய்ச்சி மற்றும் முன்னேற்ற அமைப்பையும் தான் நினைத்துக் கொண்டேன்.... நான் அதிர்ஷ்டமுடையவன்தான்" என்று சொல்லும் அவில் பக்கிர் ஜெயினுலாப்தீன் அப்துல் கலாம், தமிழ்நாட்டிலுள்ள ராமேஸ்வரத்தில் அக்டோபர் 15, 1931-ஆம் ஆண்டில் பிறந்தார். இவரது தந்தை சங்கு, கிளிஞ்சல்களைச் சேகரித்து கடற்கரையில் விற்று ஜீவனம் நடத்தி வந்தவர்.

"பள்ளிப் பருவத்தில் தனக்கு மிகவும் உதவியாக இருந்தவர் உடன் படித்து வந்த பிராமண நண்பர் ராமசாமிதான்" என்பதை நினைவு கூறும் கலாம், வகுப்பில் அவருக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்த தன்னை, பின்பக்கத்து பெஞ்சுக்கு மாற்றி விட்டார்கள் என்பதற்காக ராமசாமி அழுதது இன்னமும் தன்னுடைய மனதில் பசுமையாக இருப்பதைத் தான் எழுதியுள்ள கவிதையில் கூடக் குறிப்பிட்டிருக்கிறார்!

இவரது அடுத்த வீட்டில்தான் ராமசாமி குடும்பம் வசித்து வந்ததாம். சிறு வயதிலிருந்தே அவர்களுடைய உதவியுடன் வளர்ந்து வந்த கலாம், இன்னமும் கீதை படிப்பதை மறக்கவில்லை. சிகரெட் பிடிப்பதில்லை. உணவு விஷயத்திலும் சுத்த சைவம். திருச்சியில் செயின்ட் ஜோசப் கல்லூரியில் படிப்பை முடித்தவுடன் மெட்ராஸ் இன்ஸ்டிடியூட் ஆஃப் டெக்னாலஜியில் ஏரோ இன்ஜினியரிங் கோர்ஸில் சேர்ந்து

# கலாமுக்கு செய்வோம் சலாம்!

முதன்மையாகத் தேறினார்.

1958-ஆம் ஆண்டில் டிபன்ஸ் ரிசர்ச் அண்ட் டெவலப்மெண்ட் ஆர்கனைசேஷனில் வேலைக்குச் சேர்ந்தார். தொடர்ந்து இந்தியன் ஸ்பேஸ் ரிசர்ச் ஆர்கனைசேஷனில் 'எஸ்எல்வி-3' தயாரிப்பு புராஜெக்ட் டைரக்டராகப் பதவியேற்று, 1980-ஆம் ஆண்டு இந்தியாவின் முதல் சாடிலைட் 'ரோகிணி'யை விண்வெளியில் செலுத்திய வகையில் முக்கியப் பங்குபெற்றார்.

ரோகிணியின் வெற்றியைத் தொடர்ந்து எஸ்எல்வி டெக்னாலஜியை ராணுவத் துறையில் பயன்படுத்தினால் என்ன என்ற ஆர்வம் கலாமின் மனத்தில் எழுந்தது. "உலகின் முதல் ஏவுகணையை இந்தியாதான் தயாரித்தது. இந்த ஏவுகணைகள் பிரிட்டிஷ் யுத்த கண்காட்சியில் இடம்பெற்றிருக்கின்றன. கன் பவுடர் நிரம்பிய சின்னக் குழாய், சிறு துவாரம், செதுக்கி வைத்த வாள் தோற்றம். இதை வைத்துத்தான் பிரிட்டிஷாரைத் தோற்கடித்தனர். சரித்திரம் திரும்புகிறது" என்று இந்தியாவின் பெருமையைக் கவிதையில் வடித்ததற்கு ஆதாரம் ஸ்ரீரங்கபட்டினத்தில் திப்புசுல்தானுக்கும் கிழக்கிந்திய கம்பெனி படைகளுக்கும் நடந்த 1792 மற்றும் 1797-ஆம் ஆண்டு யுத்தங்கள்தான் என்று குறிப்பிடுகிறார் அப்துல் கலாம்.

ஒரே ஒருமுறை நான்கு மாத காலம் அமெரிக்கா சென்று 'நாசா'வில் தங்கி செயல்பாடுகளை அறிந்து வந்ததோடு சரி. மற்றபடி தன்னுடைய படிப்பு முழுவதையும் இந்தியாவிலேயே கற்றுணர்ந்தார் என்பதோடு மேல் படிப்பிற்காக இவர் வெளிநாடு எங்கும் செல்லவில்லை என்பது குறிப்பிடத்தகுந்த விஷயமாகும்.

இந்திரா காந்தி பிரதமராக இருந்தபோது பிரபலமான அணுசக்தி விஞ்ஞானி டாக்டர் ராஜா ராமண்ணா தலைமையில் அமைக்கப்பட்ட குழுவின் பரிந்துரையின் பேரில் ஹைதராபாத்தில் உள்ள டைரக்டர் ஆஃப் டிபன்ஸ் ரிசர்ச் அண்ட் டெவலப்மெண்ட் லாபரெட்டரியில் மீண்டும் பணியாற்றும் வாய்ப்பு கலாமிற்குக் கிடைத்தது.

கடந்த பதினான்கு ஆண்டுகளில் பிருத்வி, அக்னி, திரிசூல், ஆகாஷ், நாக் என தொடர்ந்து விண்வெளியில் செலுத்தப்பட்ட ஏவுகணைகள் இவரது மேற்பார்வையிலேயே செலுத்தப்பட்டவையாகும். மேலும் பல முன்னேற்றங்கள், எலெக்ட்ரானிக் வசதிகள் என ராணுவத் துறையில் இந்தியா 2005-ஆம் ஆண்டிற்குள் தன்னிறைவு பெறுவதற்குரிய பல திட்டங்களை அப்துல் கலாம் அமைத்துக் கொடுத்திருக்கிறார்.

ஆனால், "இவையனைத்துமே என்னுடைய தனிப்பட்ட செயல்முறை அல்ல. எனக்குப் பின்னால் உள்ள ஆயிரக்கணக்கான விஞ்ஞானிகளின் கூட்டுச் செயல்தான் காரணம். திட்டங்களை ஒழுங்குபடுத்தும் பொறுப்பு மட்டுமே என்னுடையது" என்று அடக்கத்துடன் சொல்கிறார் கலாம்.

தினமும் பதினெட்டு மணி நேரம் விண்வெளி ஆராய்ச்சி, அணுசக்தித் திட்டங்கள் என பணியிலேயே மூழ்கிவிட்டதாலோ என்னவோ 66 வயதாகியும் இன்னமும் பிரம்மச்சாரியாகவே வாழ்ந்து வருகிறார் கலாம்.

"இது என்ன மகிழ்ச்சிதானா?

விண்ணை ஆராய நானென்ன விஞ்ஞானத்தை உயர்த்துகிறேனா?

அல்லது நாசங்களை விளைவிக்கும் ஆயுதங்களை நான் கொடுக்கிறேனா?"

- கடுமையான உழைப்பிற்கும் இடையே பறக்கும்போது கூட, தன்னுடைய உள் மனதில் உள்ள மென்மையான உணர்வுகளை இப்படிப்பட்ட கவிதைகள் மூலம் வெளிப்படுத்தத் தவறுவதில்லை அப்துல்கலாம்.

"இளம் விஞ்ஞானிகளுக்கு நீங்கள் சொல்ல விரும்பும் அறிவுரை என்ன?"

"கனவுகள்... கனவுகள்... கனவுகள் மேலும் கனவுகள். இந்தக் கனவுகள்தான் சிந்தனையாக மாறும். சிந்தனைகள் செயல்பாடுகளாக உருவாகலாம்" என்று சொல்லும் அப்துல்கலாம், எழுத்தாளர் சுஜாதாவின் நண்பர். ●

— அ. குமார்



'குழந்தைகள் உலகம்' என்றும், 'குழந்தைகளின் அதிசய அரங்கு' என்றும் எங்கு பார்த்தாலும் விளம்பரமாக அந்த மாநகர் முழுவதும் இருந்தது. அந்தப் பெருநகர் இப்படியொரு வியாபார விந்தையை இதற்கு முன் கண்டதில்லை என்று விற்பன்னர்களும், வல்லுனர்களும் தங்களுக்குள் விவாதித்துக் கொண்டிருந்தார்கள். அந்த மாநகரின் மக்களோ, பார்த்துக் களித்தவர்கள் ஒரு புறமும், பார்க்க வேண்டியவர்கள் என்று ஒரு பக்கமுமாக இராட்சத மூச்சு விட்டுக் கொண்டிருந்தார்கள். செய்தித் தாள்களிலும், அதில் செருகப்படும் தாள்களிலும் இது பற்றிய விளம்பரமாகவே இருந்து கொண்டிருந்தது.

**பரியான்**

எந்தவித பேதமுமின்றி எல்லா நிலையைச் சேர்ந்த குழந்தைகளும் தங்களுடைய அம்மாக்

களை அந்தக் குழந்தைகள் உலகத்துக்கு அழைத்துக் கொண்டு போகும்படி நிர்ப்பந்தித்துக் கொண்டிருந்தார்கள். அந்த அம்மாக்கள் தங்கள் கணவன்மார்களிடம் எந்தச் சந்தர்ப்பத்தில் இதற்கு ஒப்புக் கொள்ள வைப்பது என்று திட்டம் போட்டுக் கொண்டிருந்தார்கள்.

ஐக்கிய நாடுகள் சபையே விந்தைகள் நிறைந்தது என்று ஒருமனதாய் முடிவு செய்தாலும் கூட, முதலாம் குறுக்கு சாலையில் உள்ள இளங்கோ, ரமேஷ், சுரேஷ், முகேஷ் நண்பர்கள் அடங்கிய குழு அதை விவாதித்து ஒப்புக் கொண்டால் தவிர அது விந்தைகள் நிறைந்தது என்று ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது.

அந்தத் தெருவைச் சேர்ந்த இளங்கோ "டேய், எங்கப்பா என்னை ஷோவுக்கு கூட்டிக்கிட்டு போனாரே" என்று பீற்றிக் கொண்டான். "ஆரம்பத்திலேயே போய்ப் பாத்தா எவ்வளவு நல்லா இருக்குது" என்று அலட்டிக் கொண்டான் முகேஷ்.

"சரி, என்ன பாத்த?"

"அங்க வந்து, பாட்டுக்கு ஏத்தபடி ராகத்தோட சேர்ந்து ஒரு பொண்ணு நல்ல நல்ல சேலை கட்டிக்கிட்டு நடந்துக்கிட்டிருந்துச்சு."

அந்த அசையா பொம்மைகளுக்கு வண்ண சேலைகளை உடுத்தி அழகு பார்ப்பதைவிட இனிமை ததும்பும் பெண்களையே அழகுப் பதுமைகளாக உலவவிட்டு சேலைகள் விற்பனையை ஊக்குவிப்பதற்காகச் செய்யப்பட்டிருந்த ஏற்பாடுதான் அவ்விதம் அந்தச் சிறுவர்களால் பேசிக் கொள்ளப்பட்டிருந்தது.

அங்கே வழியும் நீரூற்றுக்களையும், செயற்கையாக மாற்றப்பட்டிருந்த பாறைப் பிளவுகளில் தொங்கும் அருவிகளையும் அதிசயித்த சிறுவர்கள் உண்டு. இவை எல்லாம் குழந்தைகள் அதிசயம் என்ற அந்த விற்பனை அரங்கின் உள்ளேயே அமைக்கப்பட்டிருந்தன.

அப்போது அவர்களுடைய இன்னொரு கூட்டாளி ரமேஷ் வந்து சேர்ந்தான். இளங்கோ, முகேஷ் இரண்டு பேரும் வேகமாக ஓடிப்போய் ரமேஷிடம் சென்று "ரமேஷ் என்னடா பாத்தியா" என்று போட்டியிட்டுக் கேட்டார்கள்.

"இங்கே பாத்தியா, புதுச்சட்டை." நீலக்கோடுகளும் சிவப்பு வண்ணமுமாய் அவன் அணிந்திருந்த சட்டையைக் காண்பித்து சந்தோஷப்பட்டுக் கொண்டான்.

அதற்குள் இளங்கோ "ஏய், என்ன அதிசயமாய் பாத்த அப்படீன்னு சொல்லுடான்னா, நீ என்னவோ புதுச் சட்டை வாங்குனதப்பத்தி அலட்டிக்கறயே" என்றான்.

"அதுவா, அங்க விற்பனை உலகத்துல பாத்தீனா ஒருத்தர் நல்லா பெயிண்ட்ல படம் வரஞ்சுக்கிட்டிருக்கார். அதில என்ன விசேஷன்னா, பொடவையிலேயே அப்படியே வரயறார். பொடைவையில என்ன ஓவிய அமைப்பு வரணும்னு சொல்றோமோ, அத அப்படியே டிசைனா வரஞ்சுடறார். அத மேற்கொண்டு அச்சடிக்கவோ வேற ஒண்ணும் பண்ணவோ வேண்டியதில்லை. அது அப்படியே புடைவையில வந்துடுது. அது என்னவோ விசேஷமான பெயிண்டா மூலெ."

அப்படியா என்று நண்பர்கள் வாயைப் பிளந்து கேட்டுக் கொண்டிருந்தனர்.

"ஆமா, இது எங்கடா இருக்கு? நாங்க பாக்கவே இல்லையே" என்று விசாரித்துக் கொண்டனர்.

இளங்கோ என்ற அந்த நண்பன், "ஏண்டா அப்ப வந்து, நீ சொல்றவர் நம்ம தாதாபாய் வாத்தியாரைவிட நல்லா வரைவாராடா?"

# சிறுவர்கள் அதிசயம்

"அட இவவொருத்தன்! அவரென்ன நம்ம தாதாபாய் மாஸ்டர் மாதிரி போர்டுலயா வரையறார். புடைவையிலேயே நேர வரஞ்சுடறார். அது அப்படியே அச்சா வந்துடுது."

இவற்றின் நடுவே அவர்களுடைய இன்னொரு நண்பன் வந்து சேர்ந்தான்.

"ஏய் சுரேஷ், அங்க நம்ப பள்ளிக்கூடம் பக்கமாகவே இருக்கற விற்பனை நூலகம் பாத்தியா" என்று கேட்டான் ரமேஷ்.

"பாத்தேனே. அற்புதமாய் இருக்குடா" என்றான்.

"ஒனக்கு எது புடிச்சதுன்னு சொல்லு பாப்போம்" என்றான் ரமேஷ்.

"பேன்டீஸ் என்கிற குழாய் சட்டை இருந்திச்சு பாத்தியா? நான் எனக்கொண்ணு வாங்கிக் கொடுக்கச் சொல்லிக் கேட்டேன். எங்கப்பா நாளைக்கு வாங்கிக் கொடுக்கறேன் அப்படின்னு சொல்லிருக்கார்" என்றான் சுரேஷ்.

"நான் அதகேக்கல, உன்ன. பாத்த அதிசயங்களிலே எது அட்டகாசமாய் இருந்துச்சு அப்படீன்னுதான் கேட்டேன்" என்றான்.

"நம்ம அந்தக் கடையில கொடுக்கற சீட்ட வாங்கிட்டுப் போய் கொடுத்தா நம்மை முன்னாடி ஒக்கார வெச்சு அப்படியே படம் வரைஞ்சு நம்ம கையில கொடுத்திடறார் தெரியுமா."

"அப்படியா! அத இந்த இளங்கோவும் முகேஷும் சொல்லவேயில்லையே."

"அங்க கொஞ்சம் லைன் நீளமாய் நிக்கும். மற்றபடி ஒக்காந்ததும் நம்மள பார்த்து அப்படியே அச்சா வரஞ்சுக் கொடுத்திடறார். அந்த படத்தையும் நம்ம கையிலேயே கொடுத்துடறார்" என்று வரைந்து கொடுத்த படத்தையும் கையில் எடுத்துக் காண்பித்தான்.

அந்தச் சிறுவர்கள் அப்படிப் பேசி, புறப்படத் தயாராக இருக்கும் பொழுது, தினேஷ் என்கிற அந்த குழுவின் இன்னொரு உறுப்பினன் ஆன சிறுவன் வந்து சேர்ந்தான்.

"டேய் ரமேஷ் நில்லுங்கடா. நான் வந்துடறேன். போகாதிங்கடா" என்று அவசரமாக ஓடி வந்தான்.

அந்த நண்பர்கள் குழுவிலேயே குறும்புக்காரன் என்று பெயர் வாங்கியவன் அவன் தான்.

"தினேஷ் நீ அந்தக் குழந்தைகள் உலகம் பாத்தியா?" என்று கேட்டான் ரமேஷ்.

"பாத்தேன்டா, பிரமாதமாய் இருக்கு."

"அதுசரி. அதுல எது ரொம்ப ஒஸ்தியா இருக்குன்னு சொல்லு பாப்போம்."

"என்டா, அந்த அருவி மாதிரி கொட்டறது தானே? இல்ல சேலயில படம் வரயர்தா?"

"பேசாம இருடா. அவனே சொல்லட்டும்."

"இருங்கடா. அவன் என்ன சொல்லப் போறான்னு நானே சொல்லிடறேன்! அங்கே

வெளிய வாங்கி சாப்பிட்ட பஞ்சு மிட்டாய் தான் பிரமாதம்னு சொல்லப்போறான்."

இதற்குள் அந்த தினேஷ் வெறுப்படைந்து விட்டான். "ஏண்டா, நான் என்ன சாப்பாட்டு ராமன்னு நினைச்சுக்கிட்டீங்களா" என்று அவர்களை அடிக்கப் போனான்.

"இருங்கடா, அவன சொல்ல விடுங்கடா. இவ்வளவு பரபரப்பு, விளம்பரம் எதனால அப்படீன்னு சொல்லுங்க பாப்போம்" என்றான்.

"பூ. இதான் தெரியாதாக்கும். விற்பனை யோட சேர்த்து இந்த அதிசயங்கள் எல்லாத் தையும் ஒரே இடத்தில் கொண்டாந்திருக் காங்க பாரு, அந்த சாமர்த்தியம் தான். இதான் எல்லாருக்குமே தெரியுமே" என்றான்.

"அதான் இல்ல. அந்த தெரு மொனை லேந்தே பாத்தீங்கன்னா, தெரியுமே, கரடி, யானை, புலி, சிங்கம் என்று முகமூடியோடு தோல் உடையை போட்டுக்கிட்டு அந்த செண்டரோட வாசல்லேயே உலாத்திக்கிட்டி ருந்தாங்க. அதுலகூட ஒரு பையன், நம்மோட முன்னாடி படிச்ச பள்ளிக் கூடத்திலேயே படிச்சவன். ஸ்டீபன் என்று சொல்லி பேரு."

"அந்த பசங்களுக்கு தோலினால் ஆன சட்டை எல்லாத்தையும் ஒடம்பு முழுக்க போட்டதனால எங்க பாத்தாலும் அரிப் பாயிடுச்சு. கொப்பளமான எடத்துல எல்லாம் ரத்தம் வர ஆரம்பிச்சிடுச்சு. திருப்பி அவங் களாம் நம்ம மாதிரி சட்டை பேண்ட் போட அவ்வளவு சௌகரியப்படாதாமுல. எங்க அம்மா சொல்லிக்கிட்டிருந்தாங்க."

"ஸ்டீபன்தானாடா அது. அடையாளமே தெரியலயே."

இப்போது அந்த ஸ்டீபன் கரடி அவனைத் தொட்டுத் தொட்டு பார்த்ததாகவும் நெருக்க மாய் அன்னியோனியம் கொள்ள முனைந்த தாகவும் அவனால் எண்ணிப் பார்க்க முடிந்தது.

"ஆமா இப்பத்தான் ஞாபகம் வருது. ஒரு கால் லேசாக உந்தி உந்தி நடந்திட்டு இருந்திச்சு. கால் நொண்டின கரடி தான் ஸ்டீபன் கரடின்னு தெரியாம போச்சே."

"வாங்கடா அவனை வீட்டுல போய் பார்ப்போம்" என்று அந்த இரவில் ஒருவன் புறப்படத் தயாரானான்.

அவர்கள் சைக்கிளில் ஒற்றையாகவும் இரட்டையாகவும் சவாரி செய்யத் துவங்கி னார்கள். அந்த பிருகச் சிறுவர்களில் ஒருவன் என்று கண்டுபிடித்த ஸ்டீபன் வீட்டுக்கு அவர்கள் சென்றதும் அவன் அவர்களைப் பார்த்து வீட்டிலிருந்து வெளியே வந்தான்.

"ஏண்டா கரடி, எப்படி இருக்க" என்று



''பணியில் தூய்மை... பதவியில் தூய்மை... அரசியலில் தூய்மை... பொது வாழ்வில் தூய்மை... இதுவே நம் புதுக் கட்சியின் லட்சியம்...!''

''நம்ம கட்சிக்கு சின்னம் என்ன தலைவா!?''

''வாக்குவம் க்ளீனர்!''

– கே.ஜி.எஸ். கோவிந்தன்

நண்பர்கள் கேட்டதும் அவன் தேம்பி அழ ஆரம்பித்து விட்டான்.

" 'ஸ்டீபன்'னே கூப்பிடுங்கடா."

"சரிடா சரிடா, விளையாட்டுக்கு கூப்பிட் டோம். ஒண்ணும் கோச்சுக்காதடா."

"ஏண்டா நீங்கள்ளாம் நல்லாருக்கிங்களா" என்று அவன் கேட்க, இவர்கள் அவனை மீண்டும் "நீ எப்படிடா இருக்காய்" என்று கேட்க, ஒருவன் பேசி முடிக்கும் முன்பே மற்றவர்கள் பேசுவதும் ஒரே சமயத்தில் எல் லோரும் பேசுவதுமாக கலகலப்பு நிறைந்தது.

"சரி நீங்க எல்லாம் பாத்துட்டீங்களா? இவ்வளவு நாளாச்சு. நான் இன்னும் பாக்கல. பாக்கலான்னா, போகாதன்னிக்கு சம்பளம் கொடுக்க மாட்டாங்களாம். முன்னாடி மாதிரி நம்ம எல்லாரும் சேர்ந்து போய்ப் பாத் தோம்னா எவ்வளவு நல்லாருக்கும்."

"எவ்வளவு பேருக்குக் கைகொடுத்து கரடி மாதிரியே அனுப்பற. அதே மாதிரி வெளியே வரப்ப கூட சேர்ந்து கைகாட்டி அனுப்பற, நீ உள்ள போய்ப் பார்த்ததில்லையா?"

"இதெல்லாம் ஏற்பாடு பண்ணிக்கிட்டு இருந்தப்பொ அங்கு வேலை செஞ்சிருக்கேன். அதுக்கப்புறம் கரடி சட்டையை போட்டு கிட்டு வெளிய வந்து நின்னாச்சு. அதுக்கப் புறம் உள்ளே எல்லாம் எப்படி இருக்கும்னு கற்பனை செஞ்சு பார்த்திருக்கேனே ஒழிய நேர பார்த்ததில்லை" என்று அழத் துவங்கி யது கரடி. ○

## ரெடி...ஒன்...டூ..த்ரீ...

அடுத்த ஒலிம்பிக்ஸில், மும்பையிலுள்ள சிறு தொழில் அதிபர்களை எல்லாம் ஓடவிட்டால், தங்கப் பதக்கங்கள் குவியும்! அப்படி விழுந்தடித்துக் கொண்டு மும்பையிலிருந்து, குஜராத்திலுள்ள 'வாபி'க்கும், தமனிலுள்ள 'ஸில்வாசா'வுக்கும் ஓடுகிறார்கள். இங்கே "extortionists" தொல்லை அதிகரித்து விட்டதாம்! ஒன்று, அண்டர்வர்ல்டின் மிரட்டல்; அல்லது, அதை சாப்பிட்டு ஏப்பம் விடக் கூடிய எக்ஸைஸ், ஸேல்ஸ் டாக்ஸ், இன்கம்டாக்ஸ்காரர்களின் நச்சரிப்பு! போலீஸ்காரர்களைவிட இப்போதெல்லாம் இந்த 'சுரண்டல்காரர்'களுக்குத்தான் 'இன்ஃபார்மர்கள்' அதிகம் இருக்கின்றனராம். ஓரளவு மின்சாரப் பிரச்னை இருந்தால் கூட, வரித்தொல்லை, தொழிலாளர் தலைவலி, இவை எல்லாம் இல்லாதிருப்பதால், குஜராத்தே சொர்க்கம் எனப் பலர் படை எடுக்கின்றனர். இந்நிலை நீடித்தால், 'இந்தியாவின் தொழில் தலைநகர்' என்ற பட்டமும் மும்பையிடமிருந்து ஓடிவிடும் போலிருக்கிறது!

## உறுமீன் வருமளவும்

வர இருக்கும் தேர்தலில், சிவசேனைக்காக சேஷன் பிரசாரம் செய்யப் போகிறாராம்! அண்மையில், 'மாதோஸ்ரீ'யில் தாக்கரேவைச் சந்தித்து அவர் உரையாடியதும், 'சிவசேனை சார்பில் சேஷன் போட்டியிடப் போகிறாரோ?' என வம்பு வட்டாரங்கள் கவலைப்பட, 'சேஷனுக்கு பார்லிமெண்டரி ஸீட்டில் விருப்பமில்லை' என திட்டவட்டமாக அறிவித்து விட்டார் சிவசேனைத் தலைவர் சதீஷ் பிரதான். ஏதோ, கடந்த ஜனாதிபதி தேர்தலில், நாராயணனுக்கு எதிராக சேஷனுக்கு ஆதரவளித்தது வீண் போகவில்லை என்ற திருப்தி சேனைக்காரர்களுக்கு. எந்தக் கட்சியுமே சுரத்தில்லாமல் ஆட்டம் கண்டிருக்கும் நேரத்தில், தேர்தல் பிரசாரங்களின்போது கூட்டத்தை ஈர்க்க சேஷன் போன்ற ஒரு அரசியல் சார்பற்ற தலைவர் கிடைத்திருக்கிறாரென்றால்..? ஓடு மின்களை ஓடவிட்டு, உறுமீன் வரும் வரையில் காத்து நிற்க தாக்கரேவுக்குத் தெரியாதா என்ன?

# தேர்தல் களத்தில் சேஷன்!

## அயோத்தி பிரச்னைகள்

பிரசித்தி பெற்ற உருதுக் கவிஞர் அலி சர்தார் ஜஃப்ரிக்கு, மராத்திய உருது அகாதமி, ஞானேஷ்வர் விருதை அறிவித்து, மாதம் ஏழாகிறது! இன்னும் விருதை வழங்கியபாடில்லை! அவர் எழுதிய 'அயோத்யா' என்ற கவிதைதான், பிரச்னையின் ஆணிவேர். காரியதரிசி யாமீன் ஃபாருக் சிவசேனைக்காரர். "கொடுங்கோலாட்சி நிலைக்காது" என கவிஞர் விஷமத்தனமாகப் பாடியிருப்பதற்கு பலத்த எதிர்ப்பு உள்ளது' என்கிறார் இவர். சேர்மன் தால்கியும் மற்றும் நால்வரும், 'சரயு நதி வருந்துவதாக கவிஞர் பாடியுள்ளாரே தவிர, பாப்ரி மஸ்ஜித் பற்றி ஒரு வரி கூட இல்லை! கவிஞரை அவமதித்ததால் நாங்கள் ராஜினாமா



செய்கிறோம்' என விலகிவிட்டனர். ஜாஃப்ரீயோ "நான் சீதா-ராம பக்தன்; யார் மனத்தையும் புண்படுத்தும் எண்ணமில்லை" என்கிறார். அயோத்திப் பிரச்னைக்கு ஆயுள் அதிகம்; முதலில் அரசியல், அடுத்து ஆன்மிகம், இப்போது இலக்கியம்... அப்புறம் என்னவோ?

## 'நாய்' வாழ்வு

தீவிரவாதக் கும்பல்கள் வசம் புதிதாக Sound-Sensitive 'பாம்'கள் உள்ளனவாம். கையைத் தட்டினால், திசையை மாற்றி இயங்கும் பொம்மைக் கார்களைப் போல், ஒரு நாய் குரைத்தால் கூட, படாரென்று வெடிக்கும் குண்டுகளாம் இவை! அதுவும் ஓரடி இடைவெளியில் வரிசையாக இவற்றை வைத்து விட்டால் போதும்... ஒன்று வெடித்தால், அந்த சத்தத்திலேயே மற்றவை வரிசையாக வெடிக்கத் துவங்கி விடுமாம்! இந்த குண்டுகளை, மோப்பம் பிடித்த உடன், குரைக்காமல், காலை மட்டும் தூக்கி போலீசாருக்கு ஸிக்னல் கொடுக்கும் வகையில், எட்டு லாப்ரடார் இனத்து நாய்களுக்கு விசேஷப் பயிற்சியை மும்பை போலீசார் தர இருக்கிறார்கள். ஒரு நாய்க்கு, அரசு அளிக்கும் தொகை ரூ.9000/- ஒரு கிளாஸ் - 1 கெஜெடட் ஆபீசரின் வருமானம்! (அண்மையில் நடந்த அகில இந்திய நாய் கண்காட்சியில், மும்பை 'பாம்' ஸ்குவாடைச் சார்ந்த நான்கு நாய்களுக்குத்தான் சிறப்புப் பரிசுகளாக்கும்!)

## பவுன்ஸான மானம்

மும்பை சபர்பன் ரயில்வே பாஸஞ்சர்ஸ் அஸோஸியேஷனைச் சார்ந்த டாக்டர் ஏ.கே.ஷா, 192ரூபாய்க்கு ஒரு காசோலையை SBI சர்ச்கேட் கிளையில் டெபாஸிட் செய்ய, "பணமில்லை" என்று 'செக்' பவுன்சாகிவிட்டது. 191ருக்கு 'செக்'கைப் போட்ட விஷ்ணு சர்மாவுக்கும் அதே கதிதான். இத்தனைக்கும், இவர்களுக்கு காசோலையை வழங்கியிருப்பது குப்பனோ, சுப்பனோ அல்ல! சாட்சாத் "வெஸ்டர்ன் ரயில்வே"க்காரர்கள்தான். "பயணிகளுக்கு ரீஃபண்டு சீக்கிரம் கிடைக்க வேண்டுமென்றுதான் சர்ச்கேட்டில் பிரத்யேகமாக ஒரு கணக்கு ஆரம்பித்தோம்; ஒரு ஊழியரின் தவறால் ரூ.35,625க்கு ஒரு காசோலையை உரிய நேரத்தில் கணக்கில் சேர்க்கத் தவறிவிட்டோம்" என்கிறார் W.R.யின் P.R.O.வான டாண்டன். இருந்தாலும், நூறு இருநூறுக்குக் கூடவா வழியில்லாமல் நமது பாரதிய ரயில்வே கணக்கு வைத்திருக்க வேண்டும்? பணமில்லாத காரணத்தால் செக் பவுன்ஸ் ஆனால், இரண்டு மடங்காகப் பணம் திருப்பப்பட வேண்டும் என்ற தூக படிந்த சட்டத்தைப் புதுப்பித்தால், ரயில்வேக்காரர்கள் விழித்துக் கொள்வார்களோ?

## ஃபாஸ்ட் 'டெலிவரி'

இந்தித் திரையின் angry young man, இன்று happy, old, grandpa! அமிதாப் தாத்தாவாகிவிட்டார்! அவருடைய குழந்தைகள் பிறந்த அதே 'பரீச்கேண்டி' மருத்துவமனையில்தான் பேத்தியும் பிறந்திருக்கிறது. தொழிலதிபர் நிகில் நந்தாவை மார்ச்சில் மணம் புரிந்து கொண்டு, டிசம்பரில் குழந்தையும் பெற்று விட்டார் அமிதாப்பின் மகள் ஸ்வேதா! அப்பா 'டயலாக் டெலிவரி'யில் ஃபாஸ்ட்! மகள் 'குழந்தை டெலிவரி'யில் ஃபாஸ்ட்! ●

மும்பையிலிருந்து:

**ஜெயஸ்ரீ ராஜ்**

**கிடைத்த இடத்தில் கட்டப்பட்டிருக்கும் ஃப்ளாட்டுகளில் வாஸ்து சாஸ்திரமெல்லாம் பார்க்க முடியுமா? ஆனால் எப்படிக்கட்டப்பட்ட ஃப்ளாட் அல்லது வீடுகளையும் ஃபெங்-ஷூய் என்ற சீன முறைப்படி அமைத்துக் கொள்வது சுலபம்.**



# சுலபமாகக் கடைப்பிடிக்க சீன வாஸ்து சாஸ்திரம்!

'ஃபெங்-ஷூய்' என்பது கராத்தே மாதிரியான சமாசாரமில்லை. நம்மவர்கள் கடைப்பிடிக்கும் வாஸ்து சாஸ்திரம் மாதிரி சீனர்கள் கடைப்பிடிக்கும் ஒரு முறை. நம்மவர்கள் வீடுகட்டும் போதே வாஸ்து சாஸ்திரம் பார்த்துக் கட்டுகிறார்கள். சீனர்கள் கட்டப்பட்ட வீட்டை தங்கள் சாஸ்திரப்படி அலங்கரித்துக் கொள்கிறார்கள். அதற்குத்தான் ஃபெங்-ஷூய் என்று பெயர்.

"இது பற்றிக் கொஞ்சம் விளக்குங்களேன்!" என்று சென்னை அயனாவரத்திலுள்ள - தமது வீட்டை ஃபெங்-ஷூய் முறைப்படி அலங்கரித்திருக்கும் நரசிம்மனிடம் கேட்டோம்.

"இப்போதெல்லாம் ஃப்ளாட் வாங்குவதே பெரிய விஷயமாக இருக்கிற நிலையில், வீட்டு மனை வாங்கி, வாஸ்து சாஸ்திரப்படி வீடு கட்டுவது என்பது நடுத்தர வர்க்கத்துக்குச் சாத்தியமேயில்லை. கிடைத்த இடத்தில் கட்டப்பட்டிருக்கும் ஃப்ளாட்டுகளில் வாஸ்து சாஸ்திரமெல்லாம் பார்க்க முடியுமா? ஆனால் எப்படிக்கட்டப்பட்ட ஃப்ளாட் அல்லது வீடுகளையும் ஃபெங்-ஷூய் என்ற சீன முறைப்படி அமைத்துக் கொள்வது சுலபம்.

உதாரணத்துக்கு என் வீட்டையே பாருங்கள்..." என்று நம்மை காம்பவுண்டு சுவருக்கு அழைத்துச் சென்றார்.

"இந்த என் வீடு கட்டப்பட்டபோது நான் கல்கத்தாவில் இருந்தேன். எவ்வளவோ சொல்லியும் நான் அருகே இருக்க முடியாது போனதால் கான்ட்ராக்டர் என் வீட்டு முகப்பை வாஸ்து சாஸ்திரப்படி வைக்கவில்லை. பின்னர் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு 'வேண்டுமானால் இடித்துவிட்டு மறுபடியும் வைக்கிறேன்' என்றார். 'வேண்டாம்' என்று சொல்லிவிட்டு 'ஃபெங்-ஷூய்' முறையில் அந்தக் கோளாறைச் சரிசெய்து விட்டேன்."

'அதோ பாருங்கள்' என்று அவர் சுட்டிக் காட்டிய இடத்தில் இரும்புக் கதவின் தூண்களில் குழியாடிகள் இரண்டு பொருத்தப்பட்டிருந்தன. அவற்றுக்கு மத்தியில் வாசற்படி மேலாக இன்னொரு கண்ணாடி."

"எதிர்மறை நீச்ச சக்திகளை இந்த இரண்டு கண்ணாடிகளும் கிரகித்து வெளியே தள்ளிவிடும். அதையும் மீறி உள்ளே போகும் நீச்ச சக்திகளை வாசல் அருகே பொருத்தப்பட்டுள்ள கண்ணாடி வெளியேற்றி விடும்."

குவி ஆடி, குழி ஆடி மட்டுமல்ல; சாதாரணமாகக் கண்ணாடிகள், ஸ்படிக உருண்டை, இசை எழுப்பும் தொங்கு மணிகள், சீனப் பந்துகள், புல்லாங்குழல், மீன் தொட்டி, அலங்கார



• காம்பவுண்டுச் சுவரில் பதிக்கப்பட்டிருக்கும் குழிஆடி பற்றி விளக்குகிறார் நரசிம்மன்...

• இது அலங்காரமல்ல; ஃபெங்-ஷுய்

• ஜன்னலில் பொருத்தப் பட்டிருக்கும் 'பக்வா'

செயற்கை நீருற்று போன்ற பலவும் சீன வாஸ்து முறையில் எதிர்மறை போக்கும் கருவிகளாகப் பயன்படுகின்றன."

"வியப்பாக இருக்கிறது. உங்கள் வீட்டு வரவேற்பறையில் சின்ன செயற்கை நீருற்றையும், மீன் தொட்டியையும், காற்றில் அசையும் போதெல்லாம் 'க்ளிங்' என்று இசையெழுப்பும் தொங்கு மணிகளையும் பார்த்தபோது டெகரேஷன் என்றுதான் தோன்றியது."

"பார்வைக்கு அலங்காரம் என்றுதான் தெரியும். ஆனால் அவை ஃபெங்-ஷுய் முறையில் வைக்கப்பட்டிருக்கின்றன என்பது தெரியாது. அழகுக்கு அழகு.. வாஸ்துக்கு வாஸ்து.. டூ இன் ஒன்..."

நரசிம்மன் தெரிவித்த சில கொசுறு செய்திகள்:

● ஹாங்காங் இயற்கையாகவே அமைந்திருக்கும் கோணம்தான் அதன் வளத்துக்குக் காரணம்.

● இந்தியப் பாராளுமன்றக் கட்டடம் வட்டவடிவில் அமைந்திருப்பது சரியல்ல. ஏற்படும் பல்வேறு குழப்பங்களுக்கு இந்த வடிவமைப்பே மூல காரணம்.

● திருப்பதியில் புஷ்கரணி வடக்கிலும், தெற்கிலும் மேற்கிலும் மலைகள் அமைந்திருப்பதுதான் ஏழுமலையானின் ஏற்றத்துக்குக் காரணம்.

● எண்கோண வடிவில் அமைந்துள்ள ஒரு அமைப்புக்கு 'பக்வா' என்று சீன மொழியில் பெயர். இந்த 'பக்வா' வீட்டில் இருந்தால் சுபிட்சம் நிச்சயம். இந்த 'பக்வா' ஒன்றை என் வீட்டிலும் பொருத்தியிருக்கிறேன்.

"இந்த 'ஃபெங்-ஷுய்' கலையை யார் வேண்டுமானாலும் கற்றுக் கொள்ள முடியுமா?"

"தாராளமாக!" என்கிறார் நரசிம்மன். ◉

சந்திப்பு : ராணிமைந்தன்

படங்கள் : ஸ்ரீஹரி



# "ரகுமான் இசையில் புதுசு ஒன்றுமில்லை!"

## — சிவகுமார் சர்மா

**கா**ஷ்மீரத்து பனிச் பர்சனாலிடி. வரும் ஜனவரியில் அறுபது வயதாகப் போகிறது. தந்தையிடமிருந்து சந்தூர் கற்றவர். இந்தியாவிலும், அயல் நாடுகளிலும் ஆயிரக் கணக்கில் இசை நிகழ்ச்சிகள் வழங்கிய அனுபவம், அவரது விரல்கள், சந்தூரின் தந்திகளில் விளையாடுகிறபோது வெளிப்படுகிறது - சிவகுமார் சர்மா!

"சந்தூர் வேதகாலத்திலிருந்து புழக்கத்தில் உள்ள ஓர் இசைக்கருவி. வீணை குடும்பத்தைச் சேர்ந்த இசைக் கருவி இது. இதில் நூறு தந்திகள் இருக்கின்றன. அதனால்தான் 'சத தந்தி வீணை' என்று பெயர். இதே இசைக் கருவி சைனாவிலும் வேறுபல ஐரோப்பிய நாடுகளிலும் கையாளப்பட்டிருக்கிறது என்றாலும், ஒவ்வோரு நாட்டிலும் ஒவ்வொரு பெயரில் குறிப்பிடப்படுகிறது" என்கிறார் பண்டிட் சிவகுமார் சர்மா.

**மு**தல் பெரிய கச்சேரி 55ம் வருடம். இவரது இசைப் பயணத்துக்கு வயது நாற்பது பிளஸ்.

"57ல் உஸ்தாத் ரஹ்முதின் டாகர் என்ற பிரபல வித்வானின் கச்சேரிக்கு ஏற்பாடாகி இருந்தது. தேர்ந்தெடுத்த சிலருக்கு மட்டுமே அந்த இசை விருந்துக்கு அழைப்பு அனுப்பப்பட்டிருந்தது. கச்சேரி ஆரம்பிப்பதற்கு முன்பு, திடீரென்று அவர் என்னை அழைத்து, 'கொஞ்ச நேரம் வாசி' என்று சொன்னார். நான் தயங்கினேன். காரணம், ரசிகர்கள் வந்திருப்பது பண்டிட்ஜியின் இசையைப் பருகத்தானே! ஆனால் அவர் மீண்டும் வலியுறுத்த, நான் சம்மதித்தேன்.

எனக்கு தபலா வாசிக்க யாரும் இல்லை. தபலா இல்லாமலேயே ஒரு மணி நேரம் சந்தூர் வாசித்தேன்.

என்னை மனமாரப் பாராட்டியவர், "சிவகுமார் சர்மாவின் 'யமன்' ராகத்தைக் கேட்டபின் என் மனத்தில் அந்த ராகம் மட்டுமே மீண்டும் மீண்டும் ரீங்காரமிட்டுக் கொண்டிருக்கிறது. வேறு எதுவும் எனக்கு நினைவுக்கு வரவில்லை. எனவே, இந்த சூழ்நிலையில், என்னால் கச்சேரி செய்வது இயலாத காரியம். எனவே, என்னை தயவு செய்து மன்னித்து விடுங்கள். இன்றைய இசை நிகழ்ச்சி இத்தோடு முடிந்தது.." என்று கூறிவிட்டார்.

"ரசிகர்கள் அன்று நிச்சயம் ஏமாற்ற

மடைந்திருப்பார்கள் என்று நான் உணர்ந்தாலும், அன்று எனக்குக் கிடைத்த கௌரவம் ஆயுசுக்கும் மறக்காது!" என்கிறார்.

பண்டிட் சிவகுமார் சர்மாவுக்கு, கச்சேரியில் வாசித்துக் கொண்டே இருக்கிறபோது, ரசிகர்கள் ரசித்துக் கைதட்டுவது கூடப் பிடிக்காது.

"அது என் கான்ஸெண்டிரேஷனை பாதிக்கும். வாசித்து முடித்த பிறகு கைதட்டட்டும்."

ஒரு ரசிகர் தன் ரசிகத்தன்மையை எப்படி வெளிப்படுத்த வேண்டும் என்பதற்குக் கூட பண்டிட்ஜி அளவு கோல் வைத்திருக்கிறார். ரசிகர்கள் 'ஆ!' என்று சொல்ல வேண்டும். அது இதயத்திலிருந்து வருவது. 'வாவ்' என்பது வெறுமனே வாயிலிருந்து வரும் வியப்புத்தான்!"

"சாடிலைட் சானல்களின் ஆதிக்கத்தால், நம் பாரம்பரிய சங்கீதம் பலியாகிக் கொண்டிருக்கிறது போலத் தோன்றுகிறதே?"

"இல்லை. இல்லவே இல்லை" என்கிறார் அழுத்தம் திருத்தமாய்.

"நம் பாரம்பரிய இசை தொன்மையானது. மேற்கத்திய தாக்கத்தால் கருண்டு போகிற மாதிரி பலவீனமானது இல்லை. இன்றைய இளைய தலைமுறையினருக்குப் பாரம்பரிய இசை மீதுள்ள ஆர்வம், அபரிமிதமானது. சாடிலைட் இசை வீடு தேடி வருகிறது. ஆனால் இளைய தலைமுறை, பாரம்பரிய இசையைத் தேடிப் போகிறார்கள் என்பது, வெளிச்சம் போட்டுக் காட்டப்படாமல் போகிறது. ஆக இது ஒரு மாயைதான்!"

"சந்தூர் இசை மிக மென்மையானது. ஆற்று நீரின் சலசலப்பு போன்றது. தியானம் செய்யும்போது கேட்பதற்கு உகந்தது. ஸ்வீடன் நாட்டில் ஒரு மனோ தத்துவ மருத்துவர், தம் பேஷன்ட்களின் மனநிலையை அமைதிப்படுத்த சந்தூர் இசையை சிபாரிசு செய்ததாய் ஒரு நண்பர் கூறினார்."

"ஏ.ஆர். ரஹ்மான் என்ற இளம் இசைப் புயல் பற்றி என்ன நினைக்கிறீர்கள்" என்று சிவகுமார் சர்மாவிடம் கேட்டபோது, "ரஹ்மான் இசை யில் புதிது ஏதுமில்லை. மேற்கத்திய இசைக் கருவிகளையும், நம் பாரம்பரிய கருவிகளையும் இணைத்து இசையமைப்பது இங்கே வழக் கத்தில் இருப்பதுதானே!" என்றார்.

"ஒரு காஷ்மீரத்து இசை மேதை என்ற வகையில் பதில் சொல்லுங்கள். இன்றைக்கு காஷ்மீரில் இசைக்கு இடமிருக்கிறதா?"

"இப்போது நிலைமை பரவாயில்லை. ஒன்பதாண்டுகளுக்கு முன் காஷ்மீரை விட்டு வெளியேறிய என் சகோதரரின் குடும்பம், இன்று தாய் மண்ணுக்குத் திரும்பியுள்ளது. காஷ்மீரத்தின் இன்றைய உடனடித் தேவை அமைதி. அப்புறம்தான் இசை." ●

சந்திப்பு : **கௌதம்**

வண்ணப்படங்கள் : **யோகா**

# அக்னிசர்மா பக்கம்

## டிசம்பர் 17 முதல் 23 வரை

**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

வாரக் கடைசில நல்ல நல்ல விஷயங்களா நடக்கும். கோயில், குளம்னு போயிட்டு வர்ற சான்செல்லாம் இருக்கு. பணப் புழக்கத்துக்கும் குறைவு வராது. இயந்திரம் சம்பந்தமான வேலைல இருக்கறவங்களுக்கு நல்ல பேரும் பாராட்டும் கெடைக்கும். அப்படீன்னா வார ஆரம்பத்தில எப்படி இருக்கும்னு கேட்கறீங்களா? எதிலும் முழுசா பலன் கெடைக்காது. குறிப்பா சுய தொழில், பிசினஸ்னு இருக்கறவங்க, நிதானம் காட்டணும். புதுசா ஏதாவும் முதலீடு செய்யறதா இருந்தாலும் இந்த வாரம் வேண்டாம். பெண்கள் குடும்பத்திலிருக்கற மத்தவங்களை அனுசரிச்சுப் போகணும். பொறுமை காக்கணும்.

**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

வார ஆரம்பத்துல இரண்டு நாள் மாத்திரம் கொஞ்சம் உஷாரா இருந்துட்டீங்கன்னா போதும், மத்தபடி நல்ல வாரம் தான். ஃபாரின் போற சான்ஸ், இல்லைன்னா ஃபாரின்லேர்ந்து ஆதாயம்னு ஏதாவதொண்ணு நிச்சயம் கிடைக்கும். பட்டுப் புடவை, நகைன்னு வாங்கறதுக்கு பெண்களுக்கு யோகம் இருக்கு. கலைத்துறைல இருந்தீங்கன்னா உங்க புகழ் ஓகோன்னு ஓசரும். ஸ்பெகுலேஷன், லாட்டரி, ஷேர் எதுவானாலும் லாபம்தான். பொதுப் பணியில் ஈடுபட்டிருக்கறவங்களுக்கும் அரசியல்வாதிங்களுக்கும், நகை வியாபாரிங்களுக்கும் நல்ல வாரம். ஆபீஸ்ல வேலை பாக்கறவங்களுக்கு அதிகாரிங்க பாராட்டு உறுதி. சிலருக்குச் சிறு விபத்து அல்லது தலைவலி, காய்ச்சல்னு வரலாம்.

**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

முதல் ரெண்டு நாட்களுக்குப் பணப் பிரச்னை இருக்கும்னாலும் அப்புறம் இருக்காது. சிலர் வெளியூர்ப் பயணம் - அதனால லாபம்னு ஜமாய்ப்பாங்க. புகழும் கூடும். ஏற்றுமதி - இறக்குமதி செய்யறவங்களுக்கு நல்ல நேரம் இது. கலைத்துறை, அலங்காரப் பொருள்கள், சித்திரத் துறைன்னு இருந்தீங்கன்னா நிச்சயமா இந்த வாரம் நல்ல வாரம். ஃபாரின்லேர்ந்து நல்ல சேதி வரலாம். கெஸ்டுங்களும் வருவாங்க. சந்தோஷமான வாரம்தான்னாலும் கொடுக்கல் - வாங்கலைத் தள்ளிப் போடறதே நல்லது.

**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

எடுத்த வேலையெல்லாம் இடைஞ்சல் இல்லாம முடியும். எதிரிங்க இருந்தாங்கன்னா பணால் ஆயிடுவாங்க. உங்களோட ஆலோசனைகளால மத்தவங்க பாராட்டுவாங்க. முதலாளி - தொழிலாளிங்க ஒருத்தருக்கொருத்தர் அனுசரிச்சுப் போகணும். இல்லேன்னா பிராப்ளமாயிடும். வீட்டுக்காரர் கிட்ட ஏதாவது கோரிக்கை வெச்சிட்டுக் காத்திருக்கற திருமதிகளுக்கு இந்த வாரம் ஜெயம் தான். கலைத் துறையில இருக்கறவங்களுக்கு இது நல்ல வாரம் இல்லை. யார் வீட்டுக்காவது போறதுன்னா 'நாய்கள் ஜாக்கிரதை' போர்டு இருக்கான்னு கவனமாய் பார்த்துப் போங்க. ஏன்னா நாய் மற்றும் விஷக் கடிகளுக்கு சான்ஸ் இருக்கு. ஜாக்கிரதை!

**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

கிரக பலன் எல்லாம் சரியா இல்லைன்றதால எதிலும் எச்சரிக்கையாவே இருங்க. செய்யற தொழில்ல, நீங்க நெனச்சபடி பலன் கிடைக்காது. பார்ட்னரோட தொல்லைங்க, இல்லேன்னா சிறு சிறு வாக்குவாதங்கள் இருக்கலாம். பண விஷயம் திருப்தியா இருந்தாக் கூட மனசுல நிம்மதி இருக்காது. உடம்பு கூட சிலருக்குப் படுத்தலாம். ஆபீஸ் கோயர்ஸ், அதிகாரிங்களோட அதிருப்திக்கு ஆளாகற சான்ஸ் நெறைய இருக்கு. திடீர்ப் பிரயாணம், டிரான்ஸ்ஃபர் ஏதாவது வரலாம். புருஷன் - பொஞ்சாதிக்குள்ளகூட சிறு சிறு கருத்து வேறுபாடு வந்து உறவை பாதிக்கலாம், உஷாரா இருங்க.

**துலாம் ராசிக்காரரான எம்.எஸ். உதயமூர்த்திக்கு இது லாபகரமான வாரம். நண்பர்களால் உதவி, வெளியூரிலிருந்து சந்தோஷச் செய்தின்னு பிரமாதமா அமையப் போவுதாம்!**

**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

உங்களுக்குச் சாதுர்யம் அதிகம்ங்க. அதனால எடுத்த காரியமெல்லாம் இந்த வாரம் ஜெயம் தான். பணம் தாராளமாய்ப் புழங்கும். கொடுக்கல் - வாங்கல் திருப்தியா இருக்கும். புடைவை, நகைன்னு எது வாங்க நினைச்சிருந்தாலும் திருமதிகள் வாங்கிடுவாங்க. வெளியூர்ப் பயணம் சிலருக்கு வாய்க்கும்னாலும் அதால லாபம்தான். சங்கீதம், நாடகம், காவல், ராணுவத் துறையினருக்கும் சந்தோஷமான வாரம்தான். பிரண்ட்ஸுங்க உதவியா இருப்பாங்க. பஸ் - லாரி மாதிரியான போக்குவரத்துத் தொழில்ல இருக்கறவங்க கவனமா இருக்கணும். மொத்தத்துல உங்க குடும்பத்தில இந்த வாரம் சந்தோஷத்துக்குக் கேட்கவே வேண்டாம்.

**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*










உங்களோட திறமையெல்லாம் பளிச்சிட்டு சமூகத்துல உங்க அந்தஸ்து உயரப் போற வாரம்ங்க இது. எல்லாக் காரியங்களும் இடைஞ்சலில்லாம முடியும். பிரண்ட்ஸ்ங்க உதவுவாங்க. ஆபீஸ் கோயர்ஸுக்குப் புரமோஷன், இல்லீன்னா நீங்க கேட்ட இடத்துக்கு டிரான்ஸ்ஃபர் கிடைக்கும். சில பேருக்கு அடிஷனல் சார்ஜ் கிடைக்கும். அம்மணிகள் உடல் ஆரோக்கியத்துல கவனமா இருக்கணும். வெளியூர்ச் சேதி ஏதாவது வந்து சிலருக்கு சந்தோஷத்தையோ மன அமைதியையோ குடுக்கலாம்.



**விருச்சிகம்** : *(விசாகம் 4- ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

போன வாரம் இருந்த மயக்கம், கலக்கம் எல்லாம் போய், இந்த வாரம் கமகமன்னு புத்துணர்ச்சியோட இருப்பீங்க. அரசியல்வாதிங்களுக்கு புதுத் திருப்பங்கள் *(கூட்டணியால?)* ஏற்படும். பணப் புழக்கம் ஜரூராவே இருக்கும். குடும்பத்துல ஏதாவது சுப காரியங்களுக்கு இந்த வாரம் நிச்சயம் அஸ்திவாரம் போடப்படும். பத்திரிகையாளர்கள், எழுத்தாளர்கள் மற்றும் சமூகப் பணியாளர்களுக்கு நல்ல ஏறுமுகம். சிலருக்குச் சிறு சிறு தொல்லைகள் வரலாம்கிறதால உணர்ச்சிவசப்படாம இருங்க. வார்த்தைகளை ஜாக்கிரதையா யூஸ் பண்ணுங்க.

**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

லாட்டரி, பூர்வீகச் சொத்துன்னு சிலருக்குத் திடீர் அதிர்ஷ்டம் அடிக்கற சான்ஸ் இருக்கு. மதிப்பு, செல்வாக்கெல்லாம் ஓகோன்னு உயரும். குடும்பத்தில சுபகாரியங்கள் நடந்தே ஆகணும். இல்லேன்னாலும் சந்தோஷத்துக்குக் குறைச்சல் இருக்காது. கலைத்துறையினருக்கு ஜெய தேவதை வந்து கதவைத் தட்டுவாள். பெண்கள் நினைச்சது நடக்கும். புதிய பிரண்ட்ஸ்ங்க கிடைப்பாங்க. சிலருக்கு நல்லவங்க அறிமுகம், சாதுக்கள் தரிசனம் கிடைக்கும். மாணவர்களுக்கும் உற்சாகம் தரும் வாரம். சிலருக்கு டூர் போற சான்ஸ் இருக்கு. உடன் பிறப்புகளால் லாபம் கிடைக்கும்.

**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

நல்ல கிரகங்கள் பலமா இருக்கறதால எதிரிகளையெல்லாம் வெல்லக்கூடிய வல்லமை வந்திடும் உங்களுக்கு. நிர்வாகத்துல இருக்கறவங்களுக்கு மேலும் பொறுப்புகள் கூடலாம். அரசியல்வாதிங்க செல்வாக்கு அதிகரிக்கும். அரசாங்க இலாகாவுல வெகுகாலமா உடைப்பில போடப்பட்டிருந்த ஃபைல் இந்த வாரம் மூவ் ஆகி உங்களை ஆச்சரியப்படுத்தும். வியாபாரம், இரும்பு, எண்ணெய் வகையறாவுல லாபம் தான். ஆனாலும் வியாபாரிங்க விழிப்போட செயல்படாட்டா பிரச்னையாயிடும். வீடு - மனை, நிலமெல்லாம் இந்த வாரம் வேணாம். பிரயாணமும் வேண்டாம்.

**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உங்களுக்கு சமயோசித புத்தி, அதிலும் நிதானம் இருக்கறதால எடுத்த காரியத்தை ஜெயித்தே காட்டுவீங்க. எதிரிங்க சைடு வாங்கிடுவாங்க. இல்லேன்னாலும் வீக்காயிடுவாங்க. அரசுப் பணியாளர்களுக்கு புரமோஷன் சான்ஸ் இருக்கு. மருத்துவம், விஞ்ஞானம், இரசாயனத்துறையாளர்களுக்கு செழிப்பான சூழ்நிலை உருவாகும். பண விஷயம் சீரா இருந்தாலும் கட்டுக்கடங்காத செலவுகளும் வரும். ஜாக்கிரதையா இருங்க. வீடு, நிலம் வாங்கறதா இருந்தாலும் எச்சரிக்கையா இருங்க. சிலருக்கு வீண் அலைச்சல் உருவாகலாம். சிலருக்கு கால், இடுப்பு மாதிரியான இடங்கள்ல பாதிப்புகள் வர்ற சான்ஸ் இருக்கறதால உஷாரா இருக்கறது நல்லது.

**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

தமிழ்நாட்டுலதான் மழைன்னு இல்லீங்க, உங்க காட்டுலயும் இந்த வாரம் அடை மழைதான் போங்க. நினைச்சதெல்லாம் நடக்கும். எதிர்பாராத விதங்கள்ல கூட லாபம் வரும். அப்புறமென்ன பண விஷயம் ஏராளம்தான், தாராளம்தான்! குழந்தைங்க பரிசு கிரிகன்னு வாங்கிட்டு வந்து சந்தோஷப் படுத்துவாங்க. இதுவரை குழந்தை பாக்கியம் இல்லாதவங்களுக்கு இப்ப சான்ஸ் நிறைய! இத்தனையும் இருந்தாக்கூட சிலருக்கு வெளியூர்ப் பயணத்தால அலைச்சல் ஏற்படலாம். சிலருக்கு வாகனப் பயணத்தில் மைனர் விபத்து கிபத்து வர்ற சான்ஸ் இருக்கு. அதனால ஜாக்கிரதையா இருக்கறதும் அவசியம். ◉

நடக்குமென்பார், நடக்கும்!

எட்டாகவும், மூன்றாகவும் ஒன்றாகவும் இருப்பவன் பகவான் மஹாவிஷ்ணு. இதைப் பின்னேயிருந்து ஒன்று, மூன்று, எட்டு என்று பார்ப்போம்.



ஒன்றாகவும் பலவாகவும் இருக்கிறான் என்பதாலேதான் வேதம் தனித்தனியாக ஒற்றைப்படை எண்களாகவும் இரட்டைப்படை எண்களாகவும் சொல்லி அவனை அழைக்கிறது.

'ஒன்றிலேயும், மூன்றிலேயும், ஐந்திலேயும், ஏழிலேயும், ஒன்பதிலேயும்,..... இருப்பவனே,' என்கிறது.

அதேபோல நாலு, எட்டு, பன்னிரண்டு என்றும் தனித்தனியே சொல்கிறது வேதம்.

ஒன்றாய் இருப்பவன் மூன்றாய் இருக்கிறான் என்றால் – பிரும்ம, விஷ்ணு, மஹேஸ்வரனாய் அவன் ஆனான்.

அவனே ஐந்தானான்... அப்படியென்றால், அவனே பஞ்ச பூதங்களானான்.

பகவான், தேவகி கர்ப்பத்தில் இருந்த போது அவனை தேவர்கள் ஸ்தோத்திரம் பண்ணு

பத்மவாசன்...

## 37

# தேறவொன்றுமில்லை

கிறார்கள். கர்ப்ப ஸ்துதி என்றே அதற்குப் பெயர். 'பரமாத்மா ஐந்து பதார்த்தங்களாய் இருக்கிறான்' என்று ஸ்தோத்திரம் பண்ணு கிறார்கள். ஆகாசமும் அவனே, ஜலமும் அவனே...

'சப்த குணக ஆகாசம்' என்று சொல்லப் படுகிறது. ஆகாசத்துக்கு ஒரே குணம்தான் – சப்தம் மாத்திரமே அதன் குணம்.

'ஆகாசத்திலிருந்து வாயு தோன்றியது.

வாயுவிலிருந்து அக்னி தோன்றியது.

அக்னியிலிருந்து ஜலம்,

ஜலத்திலிருந்து பூ மண்டலம் தோன்றிற்று...' என்கிறது உபநிஷத்.

ஆகாசத்துக்கு ஒரே குணம்தான் என்று சொன்னேன். வாயுவுக்கு இரண்டு குணம் இருக்கிறது. என்ன அவை...?

சப்த, ஸ்பரிசவான் வாயு: வாயுவுக்கு சப்தம் ஒரு குணம்; ஸ்பரிசம் இரண்டாவது குணம். காற்று நம் மேல் வந்து படும்போது படுவது தெரிகிறதல்லவா... ஆகையினாலே கண்ணால் பார்க்க முடியாவிட்டாலும் தொடு உணர்ச்சி யினால் உணர முடிகிறது காற்றை. அதன் சப்தத்தையும் கேட்க முடிகிறது. புயல் வந்தால் 'ஹோ'வென்று இரைச்சல். ஆந் திராவில் ஒரு முறை கடும்புயலில் மாட்டிக் கொண்டேன். ஒரே இருட்டு... அந்த இருட்டிலேயும் சப்த ஸ்பரிசவான் வாயு என்பது தான் ஞாபகம் வந்தது!

காற்றிலிருந்து தோன்றியது அக்னி. அக்னிக்கு மூன்று குணங்களிருக்கின்றன. சப்தம், ஸ்பரிசம், ரூபம்! நல்ல ரூபமும் இருக்கிறது. அக்னியை நேரே கண்ணால் பார்க்கிறோம். ஓசையும் கேட்கிறது. தொட்டால் சுடுகிறது!

அக்னியிலிருந்து ஜலம் உண்டாயிற்று. அதற்கு நான்கு குணங்கள். சப்த, ஸ்பரிச, ரூப, ரஸம். ஜலத்தை நாம் பருகுகிறோம் – அதற்கு ஒரு ரஸம் உண்டு.

ஜலத்திலிருந்து பிறந்தது பூமி. பூமிக்கு ஐந்து குணங்கள் இருக்கின்றன. சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, சுகந்தம்.

'சுகந்தங்களுக்கெல்லாம் இருப்பிடமாய் பூ மாதா இருக்கிறாள்; மஹாலக்ஷ்மி இருக்கிறாள்' – என்று வேதம் கொண்டாடுகிறது.

சாமான்யமாக வெயில் காலத்திலே படபடவென்று மழை பெய்யும். இரண்டு நிமிடம் பெய்து விட்டு நின்று போய் விடும். அந்த ஜலம் பட்ட உடனே பூமியிலே ஒரு மண் வாசனை வரும். 'இனி மழை பெய்யாது; மண் வாசனை வந்து விட்டது. அதனால் பெய்யாது' என்று உலக வழக்கிலே சொல்வதுண்டு... இப்படி விதவிதமான சுகந்தங்கள் பூமிக்குள்ளே உண்டு. இப்படி, வேறு வேறு தன்மையாய் இருக்கும் இந்த ஐம்பூதங்களிலும் ஒன்றாய் இருக்கிறான் பகவான். அவன் பெருமையை யாரால் உணர முடியும்!

ஐந்தாயிருப்பவன் ஏழாகவும் உள்ளான். 'சப்த தமே!' – அதாவது ஆறு ருதுக்களை நடத்திக் கொடுக்கக் கூடிய பெரிய ருதுவாய் – ஏழாவது ருதுவாய் – பகவான் இருக்கிறான்.

நவசமே - ஒன்பது விதமாய்ப் பரிணமித்து நிற்கிறான். பகவானுக்கு நம்முடன் இருக்கும் படியான சம்பந்தம் ஒன்பது. இந்த உலகிலே ஒன்பது வகையிலே நமக்கும் அவனுக்கும் தொடர்பு உண்டு.

அவன் ஆத்மா; அவனைச் சேர்ந்த ஆத்மா நாம்

அவன் யஜமானன்; நாம் கிங்கரர்கள்.

அவன் பிதா; நாம் புத்ரர்கள்

அவன் ஆசார்யன்; நாம் சிஷ்யர்கள்

அவன் பதி – கணவன்; நாம் தர்மபத்னி

அவன் சேஷி; நாம் சேஷ புத்திரர்கள் – இப்படி வரிசையாக ஒன்பது வகையான சம்பந்தம் பகவானுக்கும் நமக்கும்.

எண்ணிக்கையால் ஒன்று, மூன்று என்று பார்த்துக் கொண்டே போனாலும் சரி, நான்கு எட்டு என்று பார்த்தாலும் சரி, முக்கியமான சம்பந்தங்கள் தென்படும்.

நான்கு என்றால் நால் வேதமாய் அவன் இருக்கிறான். எட்டு என்றால், எட்டு

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

## அருள்வாக்கு

தானம் பண்ணிவிட்டு நாம் நம் பெயரைப் பேப்பரில் போட்டுக் கொள்ளாமல் இருக்கலாம். ஆனாலும், 'எப்படியாவது நாலு பேருக்கு நாம் தானம் பண்ணினதை நைஸாகத் தெரியப்படுத்த வேண்டும்' என்கிற எண்ணம் உள்ளூர இருந்தால் அதுவும் தோஷம்தான். அந்த நாலு பேர் நாம் தானம் பண்ணினதற்காக ஒருபங்கு கொண்டாடினால், அதோடு, 'பண்ணின தானத்தை வெளியிலேயே தெரிவிக்காமல் எத்தனை உத்தமமான குணம்!'' என்று பத்து பங்கு ஸ்தோத்திரம் பண்ணுவார்கள். மனஸுக்குள் நாம் இந்த ஸ்தோத்திரத்துக்கு ஆசைப்பட்டு விட்டால் பேப்பரில் போட்டுக் கொள்வதைவிட இதுவே பெரிய தோஷமாகிவிடும். ஆனாலும் இப்படியெல்லாம் ஆசை கீசை தலை தூக்கிக் கொண்டுதானே இருக்கிறது? அது தலையைத் தூக்கவொட்டாமல் அமுத்தி வைக்க என்ன பண்ணலாம்? ஒன்று பண்ணலாம் என்று தோன்றுகிறது. அதாவது, 'தானம் வாங்குகிறவன் நமக்கு அந்நியன் இல்லை; நம்மவனேதான்' என்ற உணர்ச்சியை நன்றாக வளர்த்துக் கொண்டு விட்டால், கொடுத்ததை வெளியில் சொல்லவே தோன்றாது. நம் குழந்தைக்கு அல்லது நெருங்கிய பந்துக்களுக்கு நாம் ஏதாவது செய்தால் அதை வெளியில் விளம்பரம் செய்து கொள்வோமா? அதே மாதிரிதான். எவரும் நமக்கு பந்துதான். ஸகல ஜந்துக்களும் ஒரே பார்வதி பரமேச்வரர்களின் குழந்தைகள்தான். அதனால் நாம் 'தானம் கொடுக்கிறோம்' என்ற வார்த்தையைச் சொல்வதுகூடத் தப்புத்தான். 'பகவான் நம்மைக் கொடுக்கும்படி வைத்தான், கொடுத்தோம்' என்று அடங்கி, பவ்யமாகக் கொடுக்க வேண்டும். எங்கே இதிலும் ஓர் அஹங்காரம் வந்து விடுமோ என்று பயந்து கொண்டு



...திககாயிருக்கிறான். பன்னிரண்டு என்றால், உயர்ந்த பன்னிரண்டு துவாதச ஆதித்யர்களாய் இருக்கிறான். இப்படி எல்லாமாய் நிற்கக் கூடியவன் பரமாத்மா.

இவ்வாறு விசேஷமாய் விளங்கக் கூடியதனாலே 'ஓம் நமோ பகவதே வாசுதேவாய' என்பதில் எட்டும் மூன்றும் ஒன்றுமாக அவனே மாறி மாறி நிற்கிறான் என்று தெரிகிறது.

அடுத்து 'மூன்றுமாகி'.... நாம் மோக்ஷத்தை அடைய வேண்டுமானால் மூன்று விஷயங்களிலே நமக்கு ஞானம் வேண்டும்: மூல மந்திரம் என்று சொல்லக் கூடிய அஷ்டாக்ஷரம்; த்வய மந்திரம் என்று சொல்லக் கூடியது; சரம ஸ்லோகம் என்று பரமாத்மா கீதையில் சொன்னது. - இந்த மூன்றுமாக அவன் இருக்கிறான்.

மூல மந்த்ரமென்பது 'ஓம் நமோ நாராயணாய.' இதைச் சொல்ல ரொம்ப நியமம் வேண்டும். கண்டவாறு கண்ட இடத்திலே சொல்லக் கூடாது.

த்வய மந்திரம் அப்படி இல்லை. அதை ஆசார்யரிடத்தில் உபதேசம் பெற்றுக் கொண்டு விட்டால், எப்போது வேண்டுமானாலும் சொல்லலாம். தூங்கும் முன்னும், விழித்த உடனேயும், அங்கே இங்கே போகும் போதும், வரும் போதும்கூடச் சொல்லலாம். உபன்யாஸத்தைக் கேட்டுக் கொண்டிருக்கும் போதே கூடச் சொல்லலாம்! காது கேட்கிறது; புத்தி கிரஹிக்கிறது; ஆனால் அதே நேரத்தில் உன் மனசிலே த்வய மந்திரத்தைச் சொல்லிக் கொண்டேயிருக்கலாம்.

இந்த மந்திரம் மிகவும் சக்தி வாய்ந்தது. பரமாத்மா; வைகுண்டத்திலே மஹாலக்ஷ்மிக்கு உபதேசம் பண்ணிய மந்திரம் இது. அப்பேர்ப்பட்ட ஏற்றமுடைய மந்திரம்!

ஓம் நமோ நாராயணாய என்ற மூல மந்திரத்தில் உள்ள மூன்று பதங்களை விளக்க வந்தது த்வய மந்திரம்.

'ஸ்ரீமன் நாராயண சரணௌ
சரணம் பிரபத்யே
ஸ்ரீமதே நாராயணாய நம:'

– லக்ஷ்மியோடு கூடிய நாராயணனுடைய பதத்தைச் சரணமாக அடைகிறேன் என்று அர்த்தம்.

எதற்காக...?

அவன் திருவடியிலே நித்ய கைங்கர்யத்துக்காக!

இரண்டு அர்த்தத்தை இந்த மந்திரம் காட்டியதாலே இதற்கு த்வய மந்திரம் என்று பெயர். என்ன இரண்டு அர்த்தங்கள்...?

உபாயம்; உபேயம் ஆகிய இரண்டு. உபாயம் என்பது அடைய வேண்டிய வழி;

கொடுக்க வேண்டும். ''ப்ரியா தேயம்'' என்கிறது உபநிஷதம். ''ப்ரியா'' என்றால், 'பயந்து கொண்டு' என்று அர்த்தம். ஸாதாரணமாக, வாங்குகிறவன்தான் பயந்து கொண்டு நிற்பான். கொடுக்கிறவன்தான் அதட்டிக் கொண்டு கொடுப்பான். வாஸ்தவத்தில் கொடுக்கிறவன்தான் பயப்பட வேண்டும் என்கிறது உபநிஷத். கடைசியாக, ''ஞானத்தோடு கொடுக்க வேண்டும்'' என்று முடிகிறது. ''ஸம்வித்''துடன் என்று சொல்கிறது. 'ஸம்வித்' என்றால் 'நிறைந்த ஞானம்'. கொடுக்கிறவன், வாங்கிக் கொள்கிறவன் இரண்டு பேர்வழிகளும் வாஸ்தவத்தில் ஒருவனேதான் என்ற அறிவுதான் அந்த 'ஸம்வித்'.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

உபேயம் - அடைந்த பிறகு ஏற்படக்கூடிய பயன். நாம் அடைய வேண்டிய வழி அவன் திருவடிதான். பயன்: திருவடியிலே நித்ய கைங்கர்யம்.

மூன்றாவது சரம சுலோகம். கீதோபதேசம் இந்த சுலோகத்தோடு முடிவதனாலே இதற்கு சரம சுலோகம் என்று பெயர்.

'எல்லா தர்மத்தையும் விட்டு என்னை பஜி!' என்கிறான் பகவான். அர்ஜுனன் ஏற்கெனவே தர்மத்தைக் கைவிட்டுவிட்டுதானே உட்கார்ந்திருக்கிறான்...? அவனிடம் போய் எல்லா 'தர்மத்தையும் விட்டு..' என்று சொல்வானேன்? 'எல்லா தர்மங்களையும் விட்டவனே!' என்று அதற்குப் பொருள் கொள்ள வேண்டும்.

தர்மங்களை, நியமங்களைக் கடைப்பிடிப்பது என்ன அவ்வளவு சுலபமா?

**ப**க்தி யோகத்தில் முனைகிறார் ஒருத்தர். அதிலே 32 வகையான பிரும்ம வித்யைகள். ஏதாவது ஒன்றையாவது பண்ண முடியுமா என்று கேட்டால், ஒன்றுமே இந்தக் கலியுகத்திலே நம்மால் பண்ண முடியாது. அந்த முப்பத்திரண்டும் என்னென்ன என்று வேண்டுமானால் தெரிந்து கொள்ளலாம்; அவ்வளவுதான். அனுஷ்டானம் என்று வரும்போது இன்றைக்கு ஒருத்தரும் பண்ண முடியாது.

இதற்கு ஒரு சின்ன உதாரணம் சொல்கிறேன்.

உபகோசல வித்யை என்று ஒரு வித்யை. இதை சாந்தோக்ய உபநிஷத்தில் நமக்குச் சொல்லி வைக்கிறது.

உபகோசலன் ஒரு சிறுவன். மாணவன். அவன் காட்டுக்குப் போனான். அங்கே சத்யகாமர் என்று ஓர் ஆசார்யர். அவரை அடி பணிந்து, ''சுவாமி, வித்யை புகட்ட வேண்டும்'' என்றான். அதற்கு அவர் சொன்னார், ''அப்பா, உபகோசலா! நான் ரொம்ப நாட்களாகத் தீர்த்த யாத்திரை போக வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். அதற்கு என் அக்னிஹோத்ரம் தடையாக இருக்கிறது...''

இரண்டு வேளையும் அக்னிஹோத்ரம் பண்ணுகிறவர்கள் வெளியே போக முடியாது. அதிகாலை ஒருமுறையும் சாயங்காலம் ஒருமுறையும் அக்னிஹோத்திரம் பண்ணியாக வேண்டும் என்னும்போது எங்கே போவது?... அக்னிஹோத்திரம் பண்ணுகிறவர்களும், அக்னிஹோத்திரம் பண்ணுவோரை கிரஹத்தில் வைத்துக் கொண்டிருப்பவர்களும் ஊரை விட்டே போக முடியாது.

அக்னிஹோத்திரி என்று பசுவுக்கு ஒரு பெயர். அதை வீட்டில் வைத்திருப்பவர்கள் வெளியூர் போக முடியுமா? நாலு பசுமாடு கொட்டிலில் இருந்தால் நாலு நாள் அதை விட்டுவிட்டுப் போய் வர முடியுமா...? அது மாதிரிதான் அக்னியை அணையாமல் சம்ரக்ஷணை பண்ண வேண்டும். உயிரோடு இருக்கிற வரையிலே சம்ரக்ஷணை பண்ண வேண்டும். விடியலில் அக்னி ஹோத்திரம் பண்ணியவர் மீண்டும் மாலையில் பண்ணப் போகிறார். மத்தியானம் இரண்டு மணிக்கு அவர் பிராணன் போய் விடுகிறது! அந்த அக்னியிலிருந்தே அவருக்கு சம்ஸ்காரமெல்லாம் நடக்கிறது. புது அக்னி எடுத்துக் கொண்டு வர வேண்டியதில்லை! இப்படி நடக்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டாமா...?

**இ**ப்படி இரண்டு காலம் அக்னிஹோத்ரம் பண்ணிக் கொண்டிருந்தார் சத்யகாமர். அதனால்தான் உபகோசலனைப் பார்த்து ''உபகோசலா! நான் யாத்திரை போய் இரண்டு மாசத்தில் வருகிறேன். நீ ஒன்று செய்... நான் வரும் வரையில் இந்த அக்னியை அணையாமல் ரக்ஷித்துக் கொண்டிரு. திரும்ப வந்து உனக்கு உபதேசம் பண்ணுகிறேன்...'' என்றார்.

''சரி ஸ்வாமி!'' என்றான்.

அவர் புறப்பட்டுப் போய் விட்டார். இவன் ரொம்ப ஜாக்கிரதையாக அக்னியை அணையாமல் ரக்ஷித்துக் கொண்டிருக்கிறான்.

இரண்டு மாசத்தில் வரேன் என்றவர், ஆறு மாசமாகியும் வரவில்லை, ஒரு வருடம் ஆயிற்று, வரவேயில்லை....

(தொடரும்)

மலேசியத் தமிழர்கள், தமிழ்நாட்டுக்கு வரும்போது, பழனி முருகனை தரிசித்த கையோடு திண்டுக்கல் வந்து, லியோனியைச் சந்தித்துப் பேசிவிட்டு, போட்டோ எடுத்துக் கொண்டு போகிறார்களாம்! (திண்டுக்கல் பஸ் ஸ்டாண்டுக்கு எதிர்த்தாற்போல இருக்கும் லியோனி வீட்டுக்கு, ஊரைச் சுற்றிக் கொண்டு போய் இறக்கி விட்டு விட்டு நூறு, இருநூறு கறக்கிற டாக்ஸிக்காரர்கள் மீது லியோனிக்குக் கொஞ்சம் கோபம்! கல்வியைப் படித்த பிறகாவது லியோனி ரசிகர்கள் உஷாராகட்டும்!)

முப்பத்து ஒன்பது வயதாகும் லியோனி, அரசாங்கப் பள்ளிக்கூடத்தில் பிஎஸ்சி ஆசிரியர். அப்பா, அம்மா இரண்டு பேருமே ஓய்வுபெற்ற பள்ளி ஆசிரியர்கள்.

"பள்ளிக்கூட வேலையுடன், உபதொழிலாகப் பட்டிமன்றங்களிலும் பங்கெடுத்துக் கொண்டிருந்தேன். சின்ன வயசு முதலே நிறைய சினிமா பார்க்கிறவன் நான். பாட்டுப் புத்தகங்களைப் பார்த்து, நானாகப் பாட்டுப் படிக்கவும் கற்றுக் கொண்டேன். அதுவும் பழைய கால ஹீரோக்களான பி.யு. சின்னப்பா, எம்.கே. தியாகராஜ பாகவதர், டி.ஆர். மகாலிங்கம் போன்றோர் குரலில் பாடினால் எல்லோரும் பாராட்டுவார்கள்.

"பட்டிமன்றங்களில் பேசுகிறபோது, இடை இடையே தேவைப்படுகிறபோது, சினிமாப் பாடல்களைப் பாடுவேன். ஜனங்கள் ரொம்ப ரசிப்பார்கள். சில சமயங்களில் நான் பேசி முடிக்கிறபோது 'இன்னும் கொஞ்சம் பேசுங்கள்' என்பார்கள். அப்போது, என்னுடைய தனிப்பாணிக்கு, மக்கள் மத்தியில் நல்ல வரவேற்பு உள்ளதை உணர்ந்தேன். தவிர, என் பட்டிமன்றப் பேச்சுப் பகுதிகளை ஒருசிலர் டேப் பண்ணி ஆங்காங்கே ஒலிபரப்பினார்கள். கேட்பவர்கள் 'யார் இந்த லியோனி?' என்று என் பக்கம் கவனத்தைத் திருப்பினார்கள்" என்கிறார்.

"பட்டிமன்றத்தைப் பொருத்தவரை நான் குருவாய் மதிப்பது சாலமன் பாப்பையா அவர்களைத்தான். பட்டிமன்றம் என்பது ஏதோ இலக்கியம் தெரிந்தவர்களுக்கான சமாசாரம் என்கிற நிலையிலிருந்து, அதை, குடும்பத்தில் அனைவரும் ரசிக்கிற அளவுக்கு ஜனரஞ்சகமாக்கியவர் அவர்தான். அதே போல அரங்கத்தில் நடக்கும் ஒரு நிகழ்ச்சி என்ற நிலையிலிருந்து அதை வீட்டுக்குள் கொண்டு வந்த பெருமை தொலைக்காட்சியையும், சாடிலைட் சானல்களையும்தான் சாரும்."

"வெறும் பொழுதுபோக்குதானா உங்கள் நோக்கம், லியோனி?"

"பொழுதுபோக்கு முதல் நோக்



• லியோனி

• குடும்பத்துடன்...

கம். அதனூடே சமூக அவலத்தை, இன்றைய அரசியலைச் சாடி, மக்களைக் கொஞ்சம் சிந்திக்கவும் வைப்பது எனது நோக்கம்! இன்று மக்களிடையே சினிமாவுக்கு மாபெரும் வரவேற்பு இருப்பதால், நான் எடுத்துக் கொள்ளும் தலைப்புகள் சினிமா சார்ந்தவையாக அமைகின்றன. நான் பட்டிமன்றங்களில் பேசிக் கொண்டிருந்த நாட்களில் என்னை நெகிழ வைத்த ஒரு சம்பவத்தைச் சொல்லட்டுமா? 'மிக நெருங்கிய சொந்தத்தில் திருமணம் செய்து கொள்ளக்கூடாது; அப்படித் திருமணம் செய்து கொண்டால், பிறக்கிற குழந்தை குறையுடையதாய் இருக்கும்' என்று நான் பேசியதைக் கேட்டு, ஒரு கிராமத்துப் பெண், சொந்த பந்தங்களின் எதிர்ப்பையும் மீறி அசலில் தன் பெண்ணுக்குத் திருமணம் செய்து வைத்தார். 'உன் பெண்ணை எனக்குக் கட்டி வைக்காவிட்டால் போகுது; அவளைக் கட்டி வைத்தால், எனக்கு என்ன வரிசை செய்வியோ, அதையாவது செய்!' என்றானாம் அந்த முறைமாப்பிள்ளை. 'நானும் ஒரு பவுன் சங்கிலியை அவனுக்குக் கொடுத்துவிட்டு, இந்தச் சங்கிலியைவிட என் பொண்ணுதான் முக்கியம்னு சொல்லிட்டேன்... உங்க பேச்சுதான் எனக்கு புத்தியக் கொடுத்தது...' என்று அந்தப் பெண்மணி சொன்னபோது மெய்சிலிர்த்துப் போனேன்..."

# "சாலமன் பாப்பையாதான் என் குரு!" - லியோனி

**வி**ஜய் டீவி, சன் டீ.வி, ராஜ் டீ.வி., மூடிவிட்ட ஜெஜெடீவி என்று ஒன்று விடாமல் நிகழ்ச்சிகள் வழங்கி, ரசிகர்களை வளைத்துப் போட, உலகெங்கும் உள்ள தமிழர்கள் மத்தியில் பிரபலமாகி விட்டார் லியோனி. மலேசியா, சிங்கப்பூர், அமெரிக்கா என்று ஒரு ரவுண்டு போய் வந்து விட்டார்.

"மலேசியாவில், பதினைந்தாயிரம் பேர் கலந்து கொண்ட நிகழ்ச்சியில், ஒரு மலாய் கீதத்தை ஹம்ஸத்வனி முதல் ஒப்பாரி வரை நாலு விதமாய்ப் பாடிக் காட்டிய போது, மொத்த ஜனமும் பத்து நிமிஷம் கைதட்டி ரசித்தது" என்கிறார்.

"மலேசியாவிலிருந்து வருகிறவர்களில் சிலர் ரொம்ப வித்தியாசமானவர்கள். ஒருவர் என் வீடு தேடி வந்து, தம் மனைவியை அறிமுகப்படுத்தி வைத்து, "நான் எது சொன்னாலும் கேக்க மாட்டேங்கறா? நீங்க அட்வைஸ் பண்ணுங்க" என்றார். எனக்கு ஒண்ணுமே புரியலை! அவர் சொல்லுவதை, அவர் பெண்டாட்டி கேக்கலைன்னா நான் என்ன பண்ண முடியும்? நான், 'உங்க வீட்ல மட்டுமில்லீங்க, எங்க வீட்லயும் அந்தப் பிரச்னை உண்டு... நாம ஆம்பளைங்க என்பதற்காக, நம் கருத்துக்களையெல்லாம் பொம்பளைங்க மேல திணிக்கறது தப்பு. வாழ்க்கையின்னா, கருத்து மாறுபாடுகள் இருக்கத்தான் செய்யும். பரஸ்பரம் விட்டுக் கொடுத்துக் கொண்டு போவதுதான் வாழ்க்கை என்று சமாதானப்படுத்தி அவர்களை அனுப்பி வைத்தேன்" என்று கூறி, தம் மனைவியை அறிமுகப்படுத்துகிறார் லியோனி!

**ம**னைவி பெயர் பழனியம்மாள்!



• டாக்டர் மனோரமா

# குழந்தைகளைக் குறி வைக்கும் டெங்கு ஜுரம்!

''டெங்கு ஜுரத்தின் நதி மூலம் நம் ஊரல்ல! முதலில் ஜாவா, அமெரிக்காவின் பிலடெல்பியா பகுதிகளில் இந்த நோய் பாதிப்பு இருந்திருக்கிறது. ஆனால் இன்று அமெரிக்கா, ஐரோப்பா, ஆஸ்திரேலியா, ஆசியா என்று உலகையே பயமுறுத்திக் கொண்டிருக்கிறது'' என்று விளக்குகிறார், டாக்டர் மனோரமா.

'டெங்கு' என்ற வைரஸ் தாக்குதலால் வருகிறது என்பதால்தான் இந்த ஜுரத்துக்கு 'டெங்கு ஜுரம்' என்று பெயர். ஆனால் இந்தியா போன்ற வெப்ப நாடுகளில் இதன் பாதிப்பு அதிகம் கிடையாது. அவ்வப்போது ஆங்காங்கே வருவதோடு சரி. பெரியவர்களுக்கு டெங்கு வைரஸை எதிர்க்கிற சக்தி இயற்கையாகவே இருப்பதால், பெரும்பாலும் குழந்தைகளே இந்த நோய்க்குப் பலியாகிறார்கள்.

வெறும் ஜுரத்தில் ஆரம்பித்து இதயத் தாக்குதலில் கொண்டு போய் உயிரைப் பறிக்கிற கொடூரமும் இந்த டெங்கு ஜுரத்துக்கு உண்டு. வந்திருப்பது டெங்கு ஜுரம்தானா என்பதை அறிந்து கொள்ள 'பான்பயோ' என்ற உடனடி டெஸ்ட் செய்து பார்க்கலாம்.''

**''இந்த நோய் எப்படி வருகிறது டாக்டர்?''**

''கொசுக்கடியால்தான். வழக்கமாகக் கொசுக்கள் இரவில்தான் கடிக்கும். ஆனால் டெங்கு வைரஸ் பரப்பும் கொசுக்களோ பகல் நேரத்தில் – குறிப்பாக காலையிலும், மாலையிலும் கடித்து, நோய் பரப்புகின்றன. தேங்கியிருக்கும் தண்ணீர்தான் இத்தகைய கொசுக்களின் உற்பத்தி ஸ்தலம்.

''எனவே, கொசுக்கடியைத் தவிர்க்க முன்னேற்பாடுகள் செய்வதுதான் டெங்கு ஜுரத்திலிருந்து குழந்தைகளைக் காக்க ஒரே வழி. வீட்டிலும், சுற்றுப்புறங்களிலும் கொஞ்சமும் தண்ணீர் தேங்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும். வீடுகளின் பால்கனி, ஜன்னல்களை ஒட்டிய சன் ஷேடு, குளியலறை போன்றவற்றில் தண்ணீர் தேங்க விடக் கூடாது.

''அடுத்த முன்னெச்சரிக்கை, வீட்டில் துப்புரவாய் கொசு மருந்து அடிப்பது, கொசு விரட்டிகளைப் பயன்படுத்துவது, குழந்தைகளுக்கு உடம்பு முழுவதையும் கவர் பண்ணுகிறாற்போல உடைகளை அணிவிப்பது.''

— ஸிமெம்

வியோனியும், பழனியம்மாளும் காதலித்துத் திருமணம் செய்து கொள்ள மதம் ஒரு தடையாக இல்லை என்பது மட்டுமில்லை; பழனியம்மாள் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகப் பணிபுரிகிறார். வியோனி பள்ளிக்கூட ஆசிரியர். இந்த அந்தஸ்து விஷயம் கூட ஒரு தடையாக இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இந்தத் திருமணம் நடந்ததற்கு ஒருவிதத்தில் எம்.ஜி.ஆரைக் காரணமாய்க் குறிப்பிடலாம். ஏன்? அவர் முதலமைச்சராக இருந்த சமயம், கல்லூரி, பள்ளி ஆசிரியர்கள் இணைந்து ஒரு கூட்டுப் போராட்டம் நடத்தினார்கள். அப்போது, ஆசிரியர்கள் மத்தியில், மைக் பிடித்துப் பேச வேண்டிய பொறுப்பு வியோனிக்கு. போராட்டத்தில் ஈடுபட்டு, கைதான ஆசிரியர்களை ஜெயிலில் போய்ச் சந்திப்பது, அவர்களது குடும்பங்களுக்குத் தேவையான உதவிகளைச் செய்வது போன்ற பணிகளைச் செய்தவர் பழனியம்மாள். இருவருக்கும் இடையே காதல் மலர, அப்புறம் என்ன? டும் டும்தான்!

"நான் ரொம்ப சிம்பிளான ஆள் சார்! இன்னும் திண்டுக்கல்லில் வாடகை வீட்டில் தான் குடியிருக்கிறேன். ஆசிரியர் வேலையை இன்னும் ராஜினாமா செய்யவில்லை. ரயிலில் பயணம் செய்கிற போது கூட நான் விரும்புவது கலகலவென்று சக பயணிகளுடன் பேசிக் கொண்டு, இரண்டாம் வகுப்பில் போவதைத்தான்! இன்னமும் என் தந்தையார், தினம் சர்ச்சுக்குப் போய் சேவை செய்து கொண்டுதான் இருக்கிறார்."

அண்மையில் சென்னை மாநகரில் வியோனி நடத்திய நகைச்சுவைப் பாட்டு மன்றம் பற்றிப் பேசுகையில் பூரித்துப் போகிறார். "நான் பாடினதெல்லாம் பழைய பாட்டுக்கள். மெட்ராஸ் ரசிகர்கள் புதுப் பாட்டுக்களைத்தான் ரசிப்பார்கள் என்று நினைத்து உள்ளூர பயத்துடன்தான் நிகழ்ச்சியை ஆரம்பித்தேன்! என் கணிப்பு தவறாகி, பழைய பாட்டுக்களை விரும்பி ரசித்தார்கள்."

– எஸ். சந்திரமௌலி

படங்கள் : யோகா

"என் குடும்பச் செலவுகளை
ஒவ்வொரு மாதமும்
நான் சுலபமாக தாங்க முடியும்."

ஆண்டிற்கு

# 11.75% என்றவாறு

ஒரு உறுதிப்படுத்தப்பட்ட வருவாய்
அனைத்து 5 ஆண்டுகளுக்கு.

**இப்போது ஆண்டிற்கு 12.40% வருடாந்தர வருவாய் தேர்வுடன்!**

யூடிஐ-ன்
மந்த்லி
இன்கம்
பிளான் 97(V)

[illegible]

**வருமான வரிச் சட்டம் 1961 பிரிவு**
**54EAவின் கீழ் மூலதன ஆதாய வரிச் சலுகையும் கிடைக்கும்**

திட்டம் நடப்பிலிருக்கும்
**17 நவம்பர் 1997 முதல்**
**31 டிசம்பர் 1997 வரை**

**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**
உங்கள் வளமான நாளைக்கு

CWPL/ UTI/ TAM/ 131/ 97

[illegible]

[illegible]

**பா. ராகவன்**

**பூ**மி, தன்னைத்தானே பதினைந்து முறை சுற்றி முடித்தபோது, பளபளத்த அலுமினிய டப்பாக்களில் பிரிண்ட்கள் வந்து இறங்கின. மூடிகளில் குங்குமம் வைத்து, கற்பூரம் காட்டி, கன்னத்தில் போட்டுக் கொண்ட ப்ரொட்யூசரைப் பார்த்தான் ஹரி. சில வாரங்களாகத் தூக்கம் இழந்த கண்கள், கொஞ்சம் பயமும் நிறைய கவலையும் தேக்கி இருந்தன.

கலைந்து விட்ட திட்டத்தால், மாறிவிட்ட கிளைமாக்ஸ். புரிந்து கொள்ளக் கொஞ்சம் புத்திசாலித்தனம் வேண்டி இருக்கும். ஹீரோயின் இல்லாமல், அவள் பேசுவது மட்டும் கேட்கப் போகிறது. அவள் இல்லாத உணர்வு, ரசிகர்களுக்கு நிச்சயம் வராது என்று தீர்மானமாகச் சொன்னான் ஹரி.

"கஜிரோ யாமமோட்டான்னு ஒரு ஜப்பானிய டைரக்டர். அவர் இதே மாதிரி ஓர் இக்கட்டில் மாட்டி, இதே டெக்னிக்கைப் பயன்படுத்தி, ஒரு படத்தில் சில ஷாட்ஸ் எடுத்து இருக்கார். அந்தப் படம் சில்வர் ஜூப்ளி."

"டைரக்டரே! ஜப்பான்காரன், குண்டு போட்டு அழிச்சாலும் எழுந்து உட்கார்ந்துப்பான். நம்ம கதை அப்படி இல்லை. நாளைக்கி, டிஸ்ட்ரிப்யூட்டருங்க, வரேன்னிருக்காங்க. பத்து மணிக்கு குட்லக்குல ஷோ வெச்சு இருக்கேன். வந்துருவீங்க இல்லை?"

**வ**ந்து விடத்தான் வேண்டும். ஒரு வேகத்தில் வெளியே போனவள், தணிந்ததும் திரும்பி விடுவாள் என்று அன்று காத்திருந்தது ஞாபகம் வந்தது. அவனுக்கு எத்தனை அதிர்ச்சி, ஆக்ரோஷம், தவிப்பு! அவள் விழிகள் எரிநட்சத்திரம் போல் அல்லவா தகித்தன? இதெல்லாம் என்னத்துக்காக? இல்லாத ஒன்றைக் கற்பனையில் சிருஷ்டித்து, சில சொற்களில் இத்தனை வருஷ வாழ்க்கையை அர்த்தமில்லாமல் பண்ணி விட்டாயே என்கிற வெறுப்பா? அல்லது, கள்ளம் பிடிபட்டு விட்ட தவிப்பா? புரியவில்லை. ஆனால், ஏதோ ஒன்று இறங்கினாற்போல இருந்தது. சுமக்க முடியாமல் தத்தளிக்க வைத்த ராட்சஸ பளு. இனி என்னவும் ஆகிவிட்டுப் போகட்டும். அதிகபட்சம் டைவர்ஸ்? விதவிதமாக யோசித்து விட்டு அன்று இரவு அப்படியே உறங்கிப் போனான்.

அதிகாலை உறக்கம் கலைந்து எழுந்த போது ஹாலில் தனியாக ஸோபாவில் ரஞ்சனி ஒரு பொட்டலமாகப் படுத்து இருந்ததைக் கண்டான். எப்போது வந்தாள் என்று கூடத் தெரியவில்லை. இருளும் இரவு வாசனையும் நிசப்தமும் அவனைத் தாக்க, தன்னைத்தானே தெருவில் நிற்கிற அநாதை போல எண்ணிக் கொண்டான்.

வயிற்றில் ஒரு யுகப் புரட்சி ஆரம்பமானது. முதல் நாள் பிற்பகலிலிருந்தே எதுவும் சாப்பிட்டு இருக்கவில்லை. அநேகமாக ரஞ்சனியும் ஒன்றும் சாப்பிட்டிருக்க மாட்டாள். அவன் சப்தமில்லாமல் ஹாலைத் தாண்டி, சமையல் அறைக்குப் போனான். ஃப்ரிட்ஜில் பால். கூலரில் தண்ணீர். மேடையில் கேஸ். அருகே லைட்டர். ஷெல்ஃபில் நெஸ்கஃபே. அங்கேயே சர்க்கரை. நிமிஷங்களில் காப்பி. இரண்டு தம்ளர்களில் எடுத்துக் கொண்டு ஹாலுக்கு வரவும், ரஞ்சனி கண் விழிக்கவும் சரியாக இருந்தது.

எதுவும் பேசாமல் நீட்டி



9



னான். இனி, தான் பேச ஒன்றுமே இல்லை என்று தோன்றியது. திறப்பு விழா அமைச்சர் போலத் தொடங்கி வைத்தாயிற்று. வெள்ளம் வடியப் போகிறதா, அணை உடையப் போகிறதா என்றுதான் பார்க்க வேண்டும்.

ரஞ்சனியும் ஏதும் பேசவில்லை. அவள் பார்வையில் ஓர் அநாயாச முறைப்பு. மேலும், நேற்று வரை தெரியாத குரூரம் கலந்த விரோதம். எதையோ சொல்லிக் கலைத்து விட்டு, இது என்ன கரிசனப் போர்வை என்று கேட்கத் தோன்றியது அவளுக்கு. ஆனால் கடுமையான மௌனம் போல் வேறு தண்டனை இருக்கப் போவதில்லை. கடவுளே, எத்தனை வக்கிரங்களில் இதுநாள் வரை உழன்று இருந்தால், அப்படி ஒரு சொல் உதிரும்? இனி நெருக்கம் சாத்தியமில்லை. உரசல் சாத்தியமில்லை. முத்தமோ, செல்லச் சில்மிஷங்களோ சாத்தியமாகப் போவதில்லை. கனமான திரைகளின் பின்னே தனிக்குடித்தனம் நடத்த வேண்டியதுதானா? தனித்தனிக் குடித்தனம்.

"காப்பி ஆறிடும்" என்றான் ஹரி.

அவள் எடுத்துக் கொண்டாள்.

"நல்லா இருக்கா?"

தான் ஏன் இப்படி வலிந்து சுமுகம் காக்க விழைகிறோம் என்று அவனுக்குக் குழப்பமாக இருந்தது. என்ன எதிர்பார்க்கிறேன்? ஒரு பிரும்மாண்டமான சண்டை? சொற்களின் துவந்த யுத்தம். விழப் போவது நீயா, நானா பார்த்து விடலாம், வா – அதுவா? அல்லது, 'என் பிரச்னையைச் சொல்லி விட்டேன்; தீர்வு உன் கையில்' என்று, கனம் குறைந்ததை வைபவமாக்கிக் கொண்டாடுகிற விதமா?

இல்லை என்று தோன்றியது. தீர்வில் அல்ல; தொடங்கி வைத்து விட்டதிலேயே மனம் சமனப்பட்டு விட்டதாகத் தோன்றியது. இனி எடுக்கப்படுகிற முடிவுகள் எதுவானாலும் ரஞ்சனியுடையதாகவே இருக்க வேண்டும் என்று நினைத்தான். ஆகவே, மேலும் சாதாரணமாக, "எங்கே போயிட்டே ராத்திரி? தேடிப் பார்த்துட்டு அலுத்துப் படுத்தவன் தான்...."

''எங்கே போனால் என்ன? ஸ்டீபன் வீட்டுக்குப் போகலை. போதும், இல்லையா?"

சடாரென்று விட்ட இடத்திலிருந்து அவள் பற்றிக் கொண்டாள்.

"பார் ரஞ்சனி! எனக்கு உன் மேல் கோபம் இல்லை. வெறுப்பு இல்லை. காரணம் தெரியலை; ஏனோ மனசில் அப்படிப்பட்டது. தப்புன்னா, தப்புன்னு சொல்லு. சில சம்பவங்கள், சில விஷயங்கள் என்னை அப்படி நினைக்க வெச்சது. நான் நினைச்சது தப்புன்னா, அதை நிரூபி. காலில் விழுந்து மன்னிப்புக் கேட்கறேன்..."

"எதை, எப்படி நிரூபிக்கறது? கேட்க வெட்கமாக இல்லை? ஸாரி. நான் எதையும் நிரூபிக்கத் தயாரா இல்லை. ஆஃப்ட்ரால் ஒரு சந்தேகக்காரனோடு வாழ்ந்திருக்கேன்ற ஞாபகமே அருவருப்பா இருக்கு."

அவனுக்குச் சிரிப்பு வந்தது. ஒரு சொல்லைத் தாங்க ஒண்ணாதவள். இதுநாள்வரை நான் எத்தனை பாரம் சுமந்திருக்கிறேன்? இறக்கி வைக்க ஒரு தோள் இன்றித் தவித்த தவிப்பு எத்தனை? தருணங்களின் அகரப் பாய்ச்சலில் எத்தனை முறை தள்ளாடி விழுந்திருக்கிறேன்? அத்தனையும் பொறுத்துக் கொண்டு இன்னும் உயிர் வாழ முடிந்திருக்கிறது. எத்தனை பெரிய விஷயம்! நல்லது. நான் கிளம்ப வேண்டும். பட வேலைகள் காத்திருக்கின்றன.

"மறுபடியும் சொல்றேன். எனக்கு உன் மேல் கோபம் இல்லை. வெறுப்போ, வருத்தமோ இல்லை. எனக்கு ஒரு பதில் சொல்லிட்டால் போதும். உடனே சொல்லணும்னு அவசியம் இல்லை. உன் கோபம் ஆறினதும் சொல்லு; பரவாயில்லை. இப்போ குளிச்சிட்டு, ஏவி.எம். போறேன். லெனின் ரூமில் இருப்பேன். சாயங்காலம் ரங்காவின் அறையில் இருப்பேன். நீ சொல்லும் வரை நான் வரலை. வரணும்னு விரும்பினால் பதில் சொல்லு. 'ஆமாம், உன் சந்தேகம் சரி'ன்னு சொல். பிறகு நான் உன் வழிக்கு வரலை. இல்லையா, 'தப்பு'ன்னு சொல்லு. அதை நிரூபி. நான் முன்னால் சொன்னது போல, மன்னிப்புக் கேட்கறேன். அப்புறம் நீ விரும்பினால்

## கல்பனா பறந்ததில் நமக்கென்ன பெருமை?



• கல்பனா

"கல்பனா சாவ்லா, அமெரிக்கக் குடியுரிமை பெற்றவர். எனவே, அவரை விண்வெளிக்குச் சென்ற முதல் இந்தியப் பெண்மணி என்று இந்தியா பெருமை கொண்டாடுவதில் அர்த்தமில்லை" என்று ஒரு சர்ச்சை எழுந்துள்ளது.

"ஆனால், விஞ்ஞான சாதனைகளைப் பொறுத்தவரை ஒருவர் எந்த நாட்டைச் சேர்ந்தவர் என்பதே ஒரு பொருட்டல்ல. கல்பனாவும், மற்ற விண்வெளி வீரர்களும் விண்வெளியில் நடத்துகிற பரிசோதனை உலகத்துக்கே பயனளிக்கிற விஷயம் என்பதுதான் முக்கியம்" என்று கூறுபவர் ராகேஷ் சர்மா. 1984ல் ரஷ்யாவிலிருந்து ஏவப்பட்ட விண்வெளிக் கப்பலில் பயணம் செய்து, விண்வெளிக்குப் போன முதல் இந்தியர் என்ற சிறப்பைப் பெற்றவர் ராகேஷ் சர்மா. தற்போது பெங்களூரில் இருக்கிறார்.



• ராகேஷ் சர்மா

"நான் விண்வெளிக்குப் போய் வந்து, பதிமூன்று வருடங்கள் கழித்து இன்னொரு இந்தியருக்கு இந்த வாய்ப்பு கிடைத்திருக்கிறது. அவரை ஏற்றிக் கொண்டு, ராக்கெட் விண்ணில் சீறிக் கொண்டு பாய்ந்த போது மெய்சிலிர்த்துப் போனேன்" என்கிறார் ராகேஷ் சர்மா.

"ஹர்கோபிந் கொரானா, சுப்ரமணியம் சந்திரசேகர் போன்றவர்கள் கூட அமெரிக்கக் குடியுரிமை பெற்றவர்கள்தாம். அவர்கள், நோபல் பரிசு பெற்ற போது, இந்தியாவில் பிறந்தவர்கள் என்று நாம் பெருமைப் படவில்லையா? கல்பனா விஷயமும் அதுபோலத்தான்" என்கிறார் ராகேஷ் சர்மா.

— கௌதம்

சேர்ந்து வாழலாம். விரும்பலைன்னா கட்டாயப்படுத்த மாட்டேன். எதுவானாலும் உன் இஷ்டம். உன் சௌகர்யம்."

சட்டென்று எழுந்து போனான்.

நிமிஷத்தில் குளித்துவிட்டு, காரை எடுத்து ஏவி. எம்மைத் தொட்டபோது விடிந்து இருந்தது. அவசர அழைப்பின் பேரில் எல்லோரும் அதிகாலையே வந்து இருக்க, போஸ்ட் ப்ரொடக்ஷன் வேலைகள் வேக வேகமாக நடக்க ஆரம்பித்தன.

சுருள் சுருளாக எடிட்டிங் முடிய முடிய, பெட்டிகள் மிக்ஸ் பண்ணப் போய்க் கொண்டே இருந்தன. பிறகு எஃபெக்ட்ஸ். கொஞ்சம் மௌனம். நிறைய இசை. அங்கே வயலின். இங்கே அழுகை. தெளித்தாற்போல் ஷெனாய். வேகத்துக்கு ரிதம் பாக்ஸ். ஓட்டத்துக்குக் குழல். ஜாலம் மிக்க சின்தஸைஸர். நாலாவது நாள் ரீ-ரெக்கார்டிங் தொடங்கி, நாற்பது மணி நேரத்தில் முடித்துக் கையில் கொடுத்து விட்டார்கள். பேய் உழைப்பு.

மனதின் மிக ஓரத்தில் அவனுக்குள் ஒரு செய்தி திரும்பத் திரும்ப ஒலிபரப்பாகிக் கொண்டே இருந்தது: ரஞ்சனி இன்னும் தொடர்பு கொள்ளவே இல்லை.

இந்த வரைக்கும் விட்டுப் போனாளே என்று நிம்மதி கொண்டாடுகிறானா? கடவுளே, என் யூகம் பொய்த்துப் போக வேண்டும் என்று எத்தனை விரும்பினேன்? ஏன் எல்லாம் தலைகீழாகப் போய்க் கொண்டிருக்கின்றன?

தினம் தினம், இரவுகளில் ரங்கா ஒரு போதகரைப் போல அவனைப் பிழியப் பிழிய, மாற்ற முயற்சி பண்ணிக் கொண்டிருந்தான்.

"உன் சந்தேகம், உன் கஷ்டம், உன் குழப்பம்னு மட்டும் பார்க்காதே ஹரி. போட்டு உடைச்சுட்டு வந்துட்டே. அவங்க எத்தனை உடைஞ்சு போயிருப்பாங்கன்னு யோசிச்சுப் பார்! அடுத்தவங்களை பாதிக்காத வரைக்கும் சுயநலம் தப்பில்லை. ஆனால் உன் விஷயம் அவங்களை என்ன பாடு படுத்தும்னு எண்ணிப் பார்."

"நான்தான் ஒப்பனா இருக்கேனே ரங்கா. அப்படி ஒண்ணும் இல்லைன்னு அவள் சொல்லட்டும். ஏன் சொல்ல மாட்டேங்கறா? அதனால்தானே பிரச்னை?"

"எனக்கென்னவோ சரியாப் படலை. ஸாரி ஹரி. நீ ரொம்பவும் அல்லல்படப் போறியோன்னு பயமா இருக்கு."

"நீ கூட இருப்பே இல்லை?"

அவன் பதில் சொல்லவில்லை. மென்மையான ஒரு புன்னகைப் போர்வையின் பின்னால் எதையோ மறைக்கிறான் என்று



"உன் மனைவிக்கு பட்டுப் புடைவை வாங்கிக் கொடுத்தது தப்பு..."

"அதைக் கேட்க நீ யாரு?"

"அதைப் பார்த்துட்டு தனக்கும் வேணும்னு கேட்டு அடம் பிடிக்கும் எதிர்வீட்டு மாமியின் கணவர்!"

— ராஜிராதா

ஹரி நினைத்தான். கீழ் வயிற்றில் கலவரப் புயல் மறுபடி மையம் கொள்ளத் தொடங்கியது.

பத்தாவது நாள் அவன் சென்ஸார் ஆபீஸுக்குப் போய், காரியம் முடிந்து கொஞ்சம் நிம்மதியுடன் திரும்பியபோது, அலுவலகத்தில் ரங்கா படபடப்புடன் நகம் கடித்துத் தவித்துக் காத்திருப்பதைக் கண்டான்.

"என்னடா?"

சட்டென்று அவனைக் கையைப் பற்றி இழுத்துக் கொண்டு மாடிக்குப் போனவன், "விஷயம் வேற ரூட்டில் போக ஆரம்பிச்சு இருக்கு. இதோ பார்!" என்று ஒரு பத்திரிகையை அவன் முன் நீட்டினான்.

பிரபல இரண்டெழுத்து இயக்குநர், மனைவியுடன் ஊடல் கொண்டு, தனியே வசிக்கிறார்(!?). ஏதேனும் காதல் விவகாரம் காரணமா என்று கோடம்பாக்கம் குடைந்து பார்க்க ஆரம்பித்திருக்கிறது....

"எப்படிடா?" என்றான் அதிர்ந்து.

"ஏன் வந்தது, எப்படி வந்ததுன்னு யோசிச்சு டைம் வேஸ்ட் பண்ணாதே. நீ தினம் என் ரூமுக்கு வந்துடறது யூனிட் ஆட்களுக்குத் தெரியும். எப்படியோ விஷயம் போயிருக்கும். ஆனால், மேலும் அசிங்கமாயிடாமல் பார்த்துக்கறது முக்கியம். என்ன பண்ணப் போறே?"

அவன் குமுறிக் கொண்டிருந்தான். கடவுளே, சினிமாக்காரனுக்கு அந்தரங்கம் என்பதே இல்லை என்று ஏன் நிர்ணயித்தாய்? மேலும் மேலும் என் தோளில் துயரங்களைத் திணித்து, நான் திணறுவதைக் காண்பதில்

உனக்கென்ன ஆனந்தம்? என் சரிவுகளை நிர்ணயித்து விட்டாயா? என் இறுதி அத்தியாயங்கள் எழுதப்பட்டு விட்டனவா? என் ஓட்டம் எல்லையை அடைந்து விட்டதா?

ஒரு வேகம் வந்தவன் போல் கிளம்பி, நேரே அந்தப் பத்திரிகை அலுவலகத்தை அடைந்தான். எடிட்டர், எடிட்டர் எங்கே? யார் தந்தது இத்தகவல்? கேட்காமல் எப்படிப் போட்டீர்கள்? ஓர் எத்திக்ஸ் இல்லை? அடுத்தவன் அந்தரங்கத்துக்கு அலைகிற வேலை, கேவலம் இல்லை? காதல் விவகாரமா? நீ பார்த்தாயா? உன் நாற்றங்களை நீ உணருவாயா முதலில்? சினிமாக்காரனைப் பற்றி என்ன எழுதினாலும் கேட்க மாட்டான் என்கிற திமிரா? என் வலிகள் தெரியுமா உனக்கு? எத்தனை ரணங்களைக் கடந்து ஒரு படம் வருகிறது தெரியுமா? உன் ஒரு வரி பொய்ச் செய்தி என் எதிர்காலத்தையே புரட்டிப் போட்டு விட்டால்தான் திருப்தியா? சீ, மனுஷர்களா நீங்கள்?

"முட்டாள், முட்டாள், முட்டாள்!" என்றான் ரங்கா. அவன்முன் அதே பத்திரிகையின் அடுத்த வாரப் பிரதியைத் தூக்கிப் போட்டான்.

சென்ற இதழில் 'இரண்டெழுத்து இயக்குநரின் மனைவி உடனான ஊடல் பற்றிக் குறிப்பிட்டிருந்தோம் அல்லவா? உண்மை வெளிப்பட்டு விட்ட கோபம், உச்சிக்கு ஏறி விட்டது அந்த 'கிருஷ்ண பரமாத்மா'வுக்கு! நம் அலுவலகத்துக்கு நேரில் வந்து தாம் தூம் என்று ஒரு குதி குதித்தார் பாருங்கள், அடடா! பத்மா சுப்ரமணியம் பிச்சை வாங்க வேண்டும். நெருப்பில்லாமல் புகையுமா?

"நீ சினிமாவுக்கே லாயக்கில்லை ஹரி. ஒரு கிசுகிசுவுக்கு இப்படியா ரியாக்ட் பண்ணுவே? சந்தி சிரிக்கப் போச்சு பார்! இனி, அவன் உன்னை விடப் போறதில்லை. ஸ்பெஷலா உனக்குன்னு ஒரு ரிப்போர்ட்டரை அப்பாயின்ட் பண்ணி, உன் லைஃபைத் தோண்டப் போறான். ஏன் இப்படி பண்ணிட்டே? என்கிட்டே ஒரு வார்த்தை சொல்லி இருக்கலாம் இல்லை? செத்தா போயிட்டேன்?"

அவன் உடைந்து போயிருந்தான். இடைவிடாத சரிவுகள் தந்த பயம். கவலை. கோபம் - எதன் மீது? அல்லது யார் மீது? தன்னைத் தவிர வேறு யாரையும் கோபித்துக் கொள்வதற்குத் தனக்குத் தகுதி இல்லை என்று தோன்றியது. என் சவக்குழியை நானேதான் தோண்டிக் கொண்டிருக்கிறேனா? ரஞ்சனி! அவள் ஏன் இன்னும் தொடர்பு கொள்ளவே இல்லை? உறவு அலுத்துப் போய், இனி நான் வேண்டாம் என்று ஒதுக்கி விட்டாளா? கடவுளே, என் தேவைகள் மிகவும் குறுகிய எல்லைகளுக்குட்பட்டவைதான். வருட ஒரு கரம். சாய ஒரு மடி. புரிந்து கொள்ள ஒரு மனம். இதைத் தருவதில் உனக்கென்ன நிர்ப்பந்தங்கள்? ரங்கா, நீயாவது இறுதிவரை என்னுடன் இருப்பாயா?

அவன் சற்று நேரம் அமைதியாக இருந்து விட்டு, ஒரு நீண்ட பெருமூச்சின் முடிவில் சொன்னான் :

"ஸாரி ஹரி. எனக்குத் தனியா படம் பண்ண சான்ஸ் வந்து இருக்கு. சௌத்ரி கூப்பிட்டு இருக்கார். இந்தப் படம் ரிலீஸ் ஆனதும் சொல்லலாம்னு இருந்தேன். வித் யுவர் விஷ்ஷஸ்..."

வாழ்த்தக் கூடத் தோன்றாமல் குலுங்கி அழ ஆரம்பித்தான். ரங்கா அவன் தோளைப் பற்றி அழுத்தி, இழுத்து அணைத்து, முதுகை ஆதரவாகத் தட்டியபோது, ஹரி, கண்ணைத் துடைத்துக் கொண்டு நிமிர்ந்து பார்த்தான். வாசல் நிலை அருகே நின்று கவனித்துக் கொண்டிருந்த உருவத்தைக் கண்டதும் அவனுக்குக் கொலை வெறி உண்டானது. மிருக வேகத்தில் எழுந்து பாய்ந்தான்.

(தொடரும்)



"தலைவர் கட்சியின் போராட்டங்களில் அடிக்கடி ஈடுபட்டு ரொம்பத் தடவை ஜெயிலுக்குப் போயிட்டு வந்தவராம்!"
— வி.எஸ். கணேசன்

28.7.93 வீட்டு வசதி வாரியம் தமிழக அரசு ஆணையில் 'சர்வ தேச விளையாட்டுப் போட்டிகளில் தங்கம், வெள்ளி, வெண்கலம் பெறும் வீரர்களுக்கு இலவச அடுக்கு மாடி மனை ஒன்று வழங்கிட உத்தரவிடப்பட்டுள்ளது. ஆனால் இருபது பதக்கங்களுக்கு மேல் (ஆசியாட் உட்பட) வலு தூக்கும் போட்டியில் பெற்றுள்ள இந்த வீராங்கனை எதிர்பார்ப்பது வீடுகூட அல்ல; ஒரே ஒரு அரசு வேலை தான்...

# "பதக்கங்கள் கிடைத்தன; வேலைதான் கிடைக்கவில்லை..."

'இத்தனை மெடல்கள்' என்று நம்மால் எண்ண முடியவில்லை; கலந்து கொண்ட போட்டிகள், சென்ற நாடுகள் எத்தனை என்றும் அவருக்கு சொல்லத் தெரியவில்லை. வெறும் ஓட்டுக் கூரை. இரட்டை அறை. கூட்டுக் குடும்பம். பிராக்டீஸ் செய்யக் கூட உகந்ததல்லாத ஒரு சூழல். அப்பா பஞ்சாலையில் பெயிண்டர். 3 சகோதரிகள், 1 தம்பி. நிறைய்ய சிக்கல்களுக்கு மத்தியிலும் நிறைய்ய தங்கம், வெள்ளி, வெண்கலப் பதக்கங்கள்.

"நான்கு வருடத்திற்கு முன் ப்ளஸ் டூ முடித்தபோது அதலெடிக்ஸ் துறையில் நான் இப்படி வருவேன் என்று நினைத்துப் பார்த்ததுகூட கிடையாது. படித்தது அரசாங்கப் பள்ளி என்பதால் மழைக்குக் கூட ஸ்போர்ட்ஸ் பக்கம் ஒதுங்கின தில்லை...!"

– நம்மை மேலும் ஆச்சர்யப்படுத்தினார் கங்காதேவி. கோவை சிங்கநல்லூர் உடையாம்பாளையத்தில் இருக்கிறார். பேசக் கூச்சப்படும் மூடி டைப். வலுதூக்கும் விஷயத்திலோ, துருதுருவென பொடிப் பையன் போல் அப்படியொரு இலாகவம். இவரின் சாதனைப் பின்னணி குறித்து கேட்டபோது நிறைய நெஞ்சு கனத்துப் போனோம்.

"ஏசியாட்டிற்கு தமிழ்நாட்டிலிருந்து சென்ற ஐந்து பேரில் அரசு உதவியும் இல்லாது, பொறுப்பான வேலையும் இல்லாது சென்றவள் நானொருத்திதான்...!" என்று ஆரம்பித்தவர், கனத்த வார்த்தைகளில் தொடர்ந்தார்.

"என் பெரியக்கா பி.ஏ., சின்ன அக்கா MSc, B.Ed, நானும் இவர்களைப் போல் பட்டதாரி ஆகி வேலையற்று மூலையில் முடங்கிக் கிடப்பதை விட ஏதாவதொன்றில் சேம்பியன் ஆனால், அதன் அடிப்படையிலாவது கலபமாய் அரசு வேலை கிடைக்கும் என்றுதான் வலுதூக்கும் வீராங்கனை ஆனேன்..."

வேலை கிடைக்குமென்று வீராங்கனையா... அதெப்படி அவ்வளவு நம்பிக்கை என்று எதிர்க் கேள்வி கேட்காதீர்கள். இவர் மாமா (அக்காவின் கணவர்) கோபால் 'weight lift' ல் கோல்டு மெடலிஸ்ட். அதன் அடிப்படையிலேயே இவருக்கு பெரம்பூர் இரயில் பெட்டி தொழிற்சாலையில் (ICF) வேலையும், சலுகையும் கிடைத்தது.


• வாங்கிய விருதுகள்

மாமா கோபாலிடம் சுமார் 3, 4 மாதப் பயிற்சி. பிறகு களத்தில் இறங்கிய 1993-ல் ஆரம்பித்து இந்த நான்கு ஆண்டுகளில் பல பிரிவுகளிலும் இவர் வாங்கிய பதக்கங்கள் மாநில, தேசிய அளவில் சுமார் 20-க்கும் மேல்.

சென்ற ஆண்டு (1996) பின்லாந்தில் நடந்த ஜூனியர் வெயிட் லிப்டிங் சேம்பியன்ஷிப் போட்டியில் 2 வெண்கலம். இந்த வருடம் ஏஷியாட்டில் நான்கு வெண்கலம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. இதற்குப் போனதனால்

**— தைவான் ஏசியாட்டில் 4 வெண்கலம்**




படிப் பையும் இவர் விட்டு விடவில்லை. அஞ்சல் வழியில் பி.ஏ மூன்றாமாண்டு படித்து வருகிறார். மெடல்கள் இருக்கட்டும். வேலை கிடைத்ததா என்று தானே கேட்கிறீர்கள்...?

"ம்கூம்...!" பலமாய் தலை யாட்டுகிறார் கங்கா.

"கடந்த ஆண்டு போர்ட் ட்ரஸ்ட்டில் (துறைமுகக் கழகம்) கேட்டோம். 'அறிவிப்பு வந்த பிறகு வாங்க' என்றனர். இந்த Weight lift, power lift-ல் சாதனை படைத்த ஆண்களை மட்டும் ரொம்ப சுலபமாக வேலைக்கு எடுத்து அவர் சார்ந்திருக்கும் sports-க்கு ஊக்கமும் பயிற்சியும் கொடுக்கும் அரசு, இப்போதெல்லாம் பெண்களுக்கு இது விஷயத்தில் ரொம்ப ஒதுக்கம்தான். அப்ளிகேஷன் கூட வாங்குவதில்லை. சென்ற வருடம், இங்கு பணிபுரியும் (போர்ட் ட்ரஸ்ட்டில்) இதே பவர் லிப்ட்டிங் ஜூனியர் வோல்டு கப் சுட்டின சூர்ய பிரபாவிற்கு ஒரு லட்சம் பரிசும், ஒரு வீடும், மாதம் ஒரு தொகைகூடக் கொடுத்த தாகத் தகவல்.

"ஆனால் எனக்கு எதுவுமில்லை. இப்போது என்டைஸ் மில்லில் பயிற்சியாளராக தினம் 21 ரூபாய் கொடுக்கிறார்கள். ஸ்போர்ட்ஸ் பயிற்சி, வெளியூர், வெளிநாடு என்று விடுமுறை எடுத்தால் அதுவும் கட்! (அடப் பாவமே...)

"சரி... இதற்கான செலவுகள்...?" என்றபோது இவர் மாமாவும் அக்காவும் பரிந்து கொண்டு வந்தனர்.

"அந்தக் கொடுமையை ஏன் கேட்கறீங்க சார்... போன தடவை பின்லாந்து போனதற்கு லையன்ஸ் கிளப், பொது ஜனங்கன்னு ஏகமா கொடுத்தும் 80,000 செலவு. செலவு பண்ணி வெகுநாள் கழிச்ச டிக்கெட் செலவு மட்டும் 49,222 ரூபாய் அனுப்பினது விளையாட்டுத்துறை. (அமைச்சர் பொங்கலூர் பழனிச் சாமி உதவியுடன்)

"இந்த முறை தைவானுக்கு காஸ்ட்யூம்ஸே 10,000 தாண்டி விட்டது. தங்கறதுக்கு 45,000ன்னு ஏக செலவு. இதுவும் பொது வசூல் தான். தினமணி நாளிதழ் உதவிக்கரம் நீட்டச் சொல்லி செய்தி வெளியிட, பல உதவிகள். 30,000 வசூலாகிவிட்டாலும் மீதி கடன்தான்.

"ஏசியாட் போகுமுன்னர் தினமணி தலையங்கம் கண்டோ என்னவோ, அரசு ஏதோ தகவல் அனுப்ப, இங்கு கலெக்டர் பரிந்துரைப்படி உதவிகள் செய்வதாகக் கூறி அதிகாரிகள் பலர் வந்து சென்றனர். அரசே செய்யும் போது இனி நாம் எதற்கு என்று லையன்ஸ், பொது ஜன அமைப்புகள் மெத்தனமாய் இருக்க, அந்த அதிகாரிகள் போனது போனதுதான். பிறகு கடைசி நேரத்தில் 'லையன்ஸிடமே' ஓடி, அவர்கள் அவசர அவசரமாய் ஒரு 13,000 வசூல் செய்து கொடுப்பதற்குள் நாங்கள் பட்டபாடு...

"அதனால்" வெளிநாடு, போட்டி என்பதெல்லாம் இதோடு சரி... இனி இந்தக் குடும்பம் தாங்காதுங்க; வேலை கிடைத்தால் இருக்கட்டும்.... இல்லை இனி ஒலிம்பிக் சான்ஸே வந்தாலும் (ஒலிம்பிக்கில் இப் போட்டியை சேர்க்கப் போகிறார்களாம்...) வேண்டாம். இப்பவே ஏகப்பட்ட கடன். இவளோடு மூணு பெண்களைக் கரை சேர்க்க வேண்டாமா... பையனைப் படிக்க வைக்க வேண்டாமா...?" குமுறுகிறார்கள் சுற்றத்தார்.

அரசின் காதில் விழுந்தால் சரி!

கட்டுரை, படங்கள் : **கா.சு. வேலாயுதன்**

## வென்ற வீராங்கனை — கே. கங்காதேவி

"'கல்கி'யும் 'அமுதசுரபி'யும் இலவசமா கிடைக்க வழி இருக்கா?"

"ஓ இருக்கே! 5 வருஷத்துக்கு, வாரா வாரம் 'கல்கி'யும், மாதா மாதம் 'அமுத சுரபி'யும் உங்க வீடு தேடி வரும்!"

"கிண்டல் பண்ணாதீங்க சார், நெசமாத்தான் கேட்கறேன்!"

"நானும் உண்மையாத்தான் சொல்றேன். நீங்க பத்தாயிரம் ரூபாயை ஸ்ரீராம் டிரஸ்ட்டுல டெபாசிட் பண்ணிட்டாப் போதும். அஞ்சு வருஷத்துக்கு 'கல்கி'யும், 'அமுதசுரபி'யும் உங்க வீட்டுக்கே வருது. தவிர, பத்தாயிரம் ரூபா டெபாசிட்டை, 5 வருஷத்திற்கு பிறகு இருபதாயிரம் ரூபாயாக திரும்ப வாங்கிக்கலாம். தவிர, 5 வருஷத்துக்கு 'கல்கி தீபாவளி மலர்' மற்றும் 'அமுத சுரபி தீபாவளி மலர்' பதிவுத்தபாலில் உங்களுக்கு கிடைக்கும்."

ஸ்ரீராம் டிரஸ்ட், 7-A இரண்டாவது அவென்யூ, அண்ணாநகர் கிழக்கு, சென்னை – 600 102. முகவரிக்கு டிராஃப்ட், அல்லது செக் அனுப்பவும்.

✂- - - - - - - - - - - - - - - - - - - - - - - - ✂

1. முழுப்பெயர்: திரு/திருமதி/செல்வி:....................

முகவரி: ....................

....................

....................

....................

2. கூட்டாக இடப்பட்டால் அவர்கள் பெயர்: ....................

முழுப்பெயர்: ....................

3. வாரிசுதாரர்: ....................

4. 'கல்கி', 'அமுதசுரபி' இதழ்கள் அனுப்பப்பட வேண்டிய முகவரி: ..........

....................

CHEQUE / D.D. No....................DT....................ON....................

இடம்: .................... அன்புள்ள

தேதி : ....................

முதலீட்டாளர் கையொப்பம்




'ஸ்ரீராம் டிரஸ்ட்',
ஏ-7, இரண்டாவது அவென்யூ,
அண்ணாநகர் கிழக்கு,
சென்னை - 600 102.
தொலைபேசி எண் : 628 6869, 628 7879



# ரோடித்தோரு மறுக்கிறார் ரகுமான்கான்!

கல்கி 7.12.97 இதழில் ஐ.டி.ஐ. ஆசிரியர்கள் தேர்வு சம்பந்தமாகச் சொல்லப்பட்ட புகார்களைப் படித்தேன். உடனடியாக எனது துறையைச் சார்ந்த சம்பந்தப்பட்ட அதிகாரிகளை அழைத்து நேரில் விசாரணை நடத்தினேன். இந்தத் தேர்வில் எந்த முறைகேடுகளும் நடைபெறவில்லை என்பதோடு நீங்கள் எழுப்பியுள்ள சந்தேகங்களுக்கு எந்த ஆதாரங்களும் இல்லை என்பதனைத் தெரிவித்துக் கொள்கிறேன். உங்களுக்குக் கடிதம் எழுதிய விழுப்புரம் மாவட்டத்தைச் சார்ந்த வாசகரும் தமது குற்றச்சாட்டை உறுதிப்படுத்தும் எந்த ஆதாரத்தையும் குறிப்பிட்டுள்ளதாகத் தெரியவில்லை.

தமிழகம் முழுவதும் உள்ள அரசு தொழிற் பயிற்சி நிலையங்களில் (ஐ.டி.ஐ.) இளநிலை பயிற்சி ஆசிரியர்களுக்கான தேர்வு, மொத்தம் 27 பதவிகளுக்கு நடைபெற்றது என்றும் இதில் 270 பேர் கலந்து கொண்டனர் என்றும் குறிப்பிட்டுள்ளீர்கள். இது தவறான எண்ணிக்கை. மொத்தம் 39 பதவிகளுக்குத் தேர்வு நடந்தது. இதில் கலந்து கொண்டவர்கள் மொத்தம் 452 பேர். இந்தத் தேர்வு, இளநிலை பயிற்சி ஆசிரியர்களுக்கான தேர்வு, அரசு ஆணை எண் : 49ன்படியே நடைபெற்றுள்ளது. வழிமுறைகள் எதுவும் மீறப்படவில்லை.

'அரசின் உத்திரவு மீறப்பட்டதால் தகுதியும் திறமையும் உள்ள பலர் புறக்கணிக்கப்பட்டுப் பெரும்பாலும் பணம் கொடுத்தவர்களுக்கே வேலை தரப்பட்டது' என்ற குற்றச்சாட்டு நியாயமற்றது. களங்கம் கற்பிப்பது. வேலை வாய்ப்பு அலுவலகங்களின் மூலம் சீனியாரிட்டி அடிப்படையில் அனுப்பப்பட்ட நபர்கள் மட்டுமே நேர்முகத் தேர்வு செய்யப்பட்டார்கள். இதில் ஏதேனும் தவறு நடந்து இருந்தால் - ஆதாரத்தோடு கல்கி சுட்டிக்காட்டினால் அரசு நடவடிக்கை எடுக்கத் தயாராக இருக்கிறது.

'இந்தத் தேர்வின் பொழுது அமைச்சர் ஒருவரின் உறவினர் இந்த ஏரியாவில் அடிக்கடி சுற்றிக் கொண்டிருந்தார்' என்று பொடி வைத்து எழுதியுள்ளீர்கள். இதையும் ஆதாரத்தோடு குறிப்பிட்டு அமைச்சரின் உறவினர் செய்த முறைகேடுகளைக் குறிப்பிடாமல் பொதுவாகக் குற்றம் சொல்வது எப்படி நியாயமாகும்? "இந்தப் பதவிக்கான தேர்வில் எம்.எல்.ஏக்கள், அமைச்சர்கள் மூலமாகச் சிலர் சிபாரிசைப் பிரயோகித்து இருக்கலாம். யாராவது பிரஷர் கொண்டு வந்தார்களா? பணம் விளையாடி இருக்கிறதா?" என்பன போன்ற சந்தேகங்களைப் பொதுவாக எழுப்பி உள்ளீர்கள். நீங்கள் சந்தேகப்படும் முறையில் எந்தத் தவறும், முறைகேடும் நடைபெறவில்லை என்பதனைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆதாரம் இல்லாத நிலையில் சொல்லப்பட்ட உங்களின் குற்றச்சாட்டுக்களை மறுக்கிறேன்.

— அ. இரகுமான்கான்
(தொழிலாளர் நல அமைச்சர்)





# தாராளமே தாரக மந்திரம்!

'தாராளமயமாக்கல் கொள்கை' என்ற தொடர், கடந்த சில ஆண்டுகளாக நம் நாட்டில் உற்சாகத்துடன் உச்சரிக்கப்பட்டு வந்தது. உண்மையில் இந்தக் கொள்கையின் பிதாமகர் ராஜாஜிதான். தொழில், வர்த்தக முயற்சிகளில் ஈடுபடுவதற்கும் விரிவாக்கப் பணிகளுக்கும் அரசு அனுமதிகளும் உரிமங்களும் பெற வேண்டியிருந்தால் ஊழலுக்கும் கால தாமதத்துக்கும் வழி வகுக்கும் என்று சுட்டிக்காட்டினார்.

'பெர்மிட் லைசென்ஸ் ராஜ்' நாட்டின் வளர்ச்சிக்குத் தடையாய் இருக்கும் என்று அதை ஒழிக்கக்கோரி பிரசாரம் செய்தார். அப்போதைய காங்கிரஸ் ஆட்சி அதையெல்லாம் காதில் போட்டுக் கொள்ளவில்லை. சுதந்தரத்துக்குப் பிறகு, நாற்பதாண்டு காலம் அரசுக் கட்டுப்பாடே கையோங்கியிருந்தது.

கடந்த பத்தாண்டு காலமாகத்தான் நிலைமை மெள்ள மாற ஆரம்பித்தது.

மன்மோகன் சிங் நிதியமைச்சரான பிறகு, அரசுக் கட்டுப்பாட்டில் பொதுத்துறையிடம் மட்டுமே இருந்த சில தொழில்கள் தனியாருக்குத் 'திறந்து விடப்பட்டன'. பாதுகாப்புத் துறை தொடர்பான உற்பத்திகளில் கூட தனியார் ஈடுபட அனுமதிக்கப்பட்டனர்.

இதுதான் தாராளமயமாக்கல் நடவடிக்கையின் முதல் அடி. அதன் அடுத்த நிலையாக அன்னிய நாட்டு முதலீடுகளை வரவேற்று, ஏற்க ஆரம்பித்தது நமது அரசு. நமது அடிப்படைத் தேவைகளை அபிவிருத்தி செய்ய அந்தப் பெரும் முதலீடுகள் உதவியாய் இருக்கும். அதனால் தொழில், வர்த்தகம் பெருகும்... என்று கணக்கிடப்பட்டது. இந்த அடிப்படை வசதிப் பெருக்கத்துக்கு அன்னிய முதலீடுகள் அவ்வளவாகக் கிடைக்கவில்லை; ஆனால் பங்குச் சந்தையிலும், தொழில் துறையிலும் அன்னிய முதலீடுகள் பெருக ஆரம்பித்தன.

ஐக்கிய முன்னணி ஆட்சிக்கு வந்தபோது, மீண்டும் இந்த தாராளமயமாக்கல் கொள்கையெல்லாம் மாறிப்போய்விடுமோ என்ற ஓர் அச்சம் இருந்தது. ஆனால் தொழிலமைச்சர் மாறன், மன்மோகன் சிங் காட்டிய வழியைப் பின்பற்றி பொதுத் துறை நிறுவனங்களுக்குக் கூடுதலான இயக்க சுதந்தரமும் அதிகாரமும் அளித்து இனிய ஆச்சர்யத்தை ஏற்படுத்தினார்.

மாறனின் சமீபத்திய நடவடிக்கை இன்னும் புரட்சிகரமானது : 'Foreign Investment Promotion Board என்ற அரசாங்க அமைப்பை ஒழித்துக் கட்டி விடலாம்' என்று முடிவெடுத்தார் மாறன். இந்த அமைப்புதான் நம் நாட்டுக்குள் வரும் அன்னிய முதலீடுகளைக் கட்டுப்படுத்தி வந்தது. இவ்வமைப்பின் அனுமதியின்றி அயல் நாட்டவர் நம் நாட்டில் முதலீடு செய்ய முடியாது.

அரசு அலுவலகங்களின் சிவப்பு நாடாத் தன்மை Foreign Investment Promotion Board இலும் இருந்தது. அதனால் பல முதலீட்டாளர்கள் உற்சாகம் இழந்ததுண்டு. இந்த அமைப்பை நீக்குவதன் மூலம் முதலீடு சுலபமாக்கப்பட்டு விடும்.

இவ்வளவு தூரம் கதவுகளை அகலத் திறந்து விட்டால், அன்னிய முதலீட்டாளர்கள் நம் பொருளாதாரத்தை அப்படியே கைப்பற்றிக் கொண்டுவிடுவார்கள் என சிலர் பயந்தனர். ஆனால் தென்கிழக்கு ஆசிய நாடுகளிடையே மாறனின் இந்தத் துணிச்சலான முடிவு ஏற்கெனவே உற்சாகத்தை ஏற்படுத்தியிருக்கிறது. கவனமாகச் செயல்படுத்தப்பட்டால் இந்தச் சீர்திருத்தம் நல்ல பலன் தரும்.

ஆனால், அதற்குள் மத்திய அரசே அல்ப ஆயுளில் முடிந்து போய்விட்டது! புதிய ஆட்சியிலும் பொருளாதார சீர்திருத்தங்கள் தொடரும் என்று பிரதமர் உறுதியளிக்கிறார். அவரது தைரியத்தைப் பாராட்டுவோம். அவர் வாக்கு மெய்யாகப் பிரார்த்தனை செய்வோம்.

— வி. கோபாலன்



# அஷ்டமி, நவமி எந்த மதத்திற்கும் சொந்தமில்லை

அஷ்டமி என்பது பிரதமி திதியிலிருந்து எட்டாம் நாள். நவமி என்பது பிரதமியிலிருந்து ஒன்பதாம் நாள். இந்த நாட்களில் கடவுளை எந்த ரூபத்தில் வேண்டுமானாலும் வழிபட்டால் அதிக பலன் கிடைக்கும்.

இந்த வழிபாடு முடிந்தவுடன் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்



• எதிர்ப்பில்லையே...?



• ஒத்து வருமா...

● ஜி. ராமதாஸ், உள்ளிக்கடை அஞ்சல் ❑

*? கோவையில் நடந்த கொடூரம் மற்ற காரணங்களைக் காட்டிலும் மக்களின் சகிப்புத் தன்மை குறைந்துவிட்டதைத் தானே காட்டுகிறது?*

! தனி நபர்களுக்குச் சகிப்புத்தன்மை இருந்தாலும் கூட்டம் கூடும் போது குழு வெறி தொற்றிக் கொள்ளும். இது இயல்பு. தலைவர்கள் எச்சரிக்கையாக இல்லாவிட்டால் வெறி பரவும்.

● இ. ராதாகிருஷ்ணன், பட்டுக்கோட்டை.

*? தமிழகம் முழுவதும் உள்ள அனைத்து ரேஷன் கடைகளிலும் தகவல் பலகை வைக்கப் போகிறார்களாமே?*

! ரேஷன் கடைகளில் மக்கள் எதிர்பார்ப்பது தகவல்களை அல்ல; தட்டுப்பாடின்றி, நியாய விலையில் அத்தியாவசியப் பொருள்களை.

● ஜெ. சந்திரசேகரன், திருச்சி – 20.

*? அடுத்த பிரதமர் யார் சார்...? ஒரே டென்ஷனா இருக்கு?*

! இப்படி டென்ஷனோடேயே வோட்டுப் போட்டுப் போட்டு மறுபடியும் பழையபடியே பண்ணிடாதீங்க!

● எம். இராசேந்திரன், லால்குடி.

*? அரசியலுக்கு வர நடிகர், நடிகைகள் ஆசைப்படுவது ஏன்...?*

! 1) சினிமாத் துறையில் நீண்ட காலம், (எல்லாராலும்) நீடித்திருக்க முடியாது. ஏதாவது ஒரு கட்டத்தில் கழற்றி விட்டு விடுவார்கள்.

2) சினிமாத் துறையில் கிடைத்த பிராபல்யத்தைத் தொடர்ந்து தக்க வைத்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசை.

3) உழைக்காமலே சம்பாதிக்க அரசியலைவிட சிறந்த வழி கிடையாது.

● ஆ. திருவாசகமணி, புஞ்சை புளியம்பட்டி.

*? கோவை கலவரத்தை அடக்க ராணுவம் வந்ததால் தமிழ்நாட்டின் சுயமரியாதை கெட்டுவிட்டது. அதனால் முதல்வர் கருணாநிதி ராஜினாமா செய்ய வேண்டும் என்று சுப்பிரமணிய சாமி கூறியுள்ளாரே?*

! சுயமரியாதை பற்றி சுவாமி பேசுவதா?... கடவுளே, கடவுளே, கடவுளே! (ரஜினி ஸ்டைலில் படிக்கவும்)

# எடைக்கு எடை தங்கம் எங்கே போகிறது?

● கே.ஆர். வேலுச்சாமி, என்னூர்

*?திருமணத்துக்கு ஆடம்பர செலவு அவசியமா?*

! திருமணத்துக்கு மட்டுமல்ல; ஆடம்பரம் எல்லா விஷயங்களிலுமே தவிர்க்கப்பட வேண்டிய விஷயம்தான்.

● சி. பழனிசாமி, சென்னை – 59.

*? பாலகுமாரனின் கதைகளில் காணப்படும்*



• இரட்டை...

• ...தோல்வி!

உபதேசங்கள் நடைமுறைக்கு ஒத்து வரக் கூடியவைதானா...?
! பாலகுமாரனின் நல்ல கதைகளைத் தேடிப் படியுங்கள். அதில் உபதேசம் இராது. உபதேசிக்கிறவை கதைகளாக இராது.
● க. திருசங்கு, குருந்தம்பட்டு.
? இன்றைய நிலையில் 'க்ளீன் இமேஜ்' உள்ள கட்சி எது...?
! அது இன்னும் தோன்றவில்லை.
● சூர்யநிலா, சேலம்-2.
? சிறையில் ஆண் கைதிகளின் அறையில் அவரவர் மனைவிகள் 'தங்கிப் போக' தாய்லாந்து நாடு அனுமதியளித்துள்ளதாமே...? கேட்கவே கன்றாவியாக இருக்கிறதே...?
! இதிலென்ன கன்றாவி? மிகவும் பாராட்டப்பட வேண்டிய ஏற்பாடு. நீண்டகாலக் கைதிகள் ஓரினச் சேர்க்கை போன்றவற்றில் ஈடுபடுவது, எய்ட்ஸ் பரவுவது போன்ற கொடூரங்கள் தவிர்க்கப்படும்.
● செ. சல்மான், பாம்பன்.
? பெண்கள் மறுமணம் செய்வது தவறு என்கிற தொனியில் ஜெயேந்திரர் பேசியுள்ளதை, பத்திரிகையாளர் வாஸந்தி தவிர எந்த மாதர் இயக்கங்களும், பத்திரிகையும் எதிர்க்கவில்லையே...? பயமா...?
! அதனாலேயே ஜெயேந்திரர் சொன்னதை அவர்கள் ஆதரிக்கிறார்கள் என்றும் அர்த்தமாகி விடாது.
● வி. பிரசன்ன கிருஷ்ணன், சென்னை – 17.
? கடைசியில் தார்மீக வெற்றி 'கு'வுக்கா அல்லது 'கே'வுக்கா...?
! 'ம'வுக்கு! (அதான் மக்களுக்கு)
● எம். கதிஜா ஹனிஃபா, திருச்சி –6.
? அரசியல்வாதிகள், தொண்டர்களிடம் எதற்காக எடைக்கு எடை தங்கமோ வெள்ளியோ வாங்குகிறார்கள்?
! தேர்தல் செலவுக்குத்தான்! அமெரிக்க ஜனாதிபதி தேர்தலையொட்டி, போட்டியிடுவோர் விருந்து வைப்பார்கள். தொழிலதிபர்கள் டிக்கெட் வாங்கிக் கொண்டு விருந்துக்குப் போவார்கள். அவங்கவங்க பழக்கப்படி கட்சிக்கு கலெக்ஷன் ஆகுது. அவ்வளவுதான்!
● ஏ. ஷண்முககந்தரம், சென்னை – 64.
? சட்ட விரோத ஸ்டிரைக் காலத்துக்கு ஊழியர்களுக்குச் சம்பளம் இல்லை என்பது போல், நாடாளுமன்றத்தை ஸ்தம்பிக்க வைக்கும் நாட்களில் எம்.பி.க்களுக்கு அலவன்ஸ், பிற சலுகைகள் மறுப்பதுதானே நியாயம்?
! ஆமாம்; ஆமாம்; ஆமாம்!
● கே.வி. சூர்யா, நல்லத்துக்குடி.
? மக்கள் சீர்கெடுவதற்குக் காரணம் அரசியலா, சினிமாவா, சுயநலமா...?
! இவையனைத்துக்கும் மேலாக, 'நமக்கென்ன வந்தது...' என்று ஒதுங்கியிருக்கும் போக்கு.
● இரா. புவனேஸ்வரி, சென்னை – 81.
? விபசாரத்தில் ஈடுபடுவோர் இந்த சமூகத்துக்காகப் பணியாற்றுகின்றனர் என்கிறாரே ரேணுகா சௌத்ரி...?
! விபசாரத்தை யாருமே விரும்பிச் செய்வதில்லை. சூழ்நிலையின் கைதிகளாகி, பின்னர் உணர்வுகள் இறுகிப்போய் விடுகிறார்கள். இவர்களை மீட்கும் முயற்சிகள் வரவேற்கப்பட வேண்டியவை. ஆனால் அந்த முயற்சியில் விபசாரத்தை 'சமூகப் பணி' என்று குறிப்பிடுவது ஆபத்தான, அபத்தமான விளக்கம்.
●எம்.ஆர். ரங்கராஜன், திருவல்லிக்கேணி.
? தியாகி தளவாய் பற்றி...?
! இறுதி வரை பொது வாழ்வில் சுறுசுறுப்புடன் ஈடுபட்ட காந்தியவாதி. கடைசி வரை மேல் சட்டை அணியாமல் வாழ்ந்தவர். உண்மையான காங்கிரஸ் தியாகிகள் வரிசையைச் சேர்ந்தவர். ஓரிருவரே இன்னும் மிச்சமிருக்கிறார்கள்.


• இளமை மாறாமல்....

• வழக்கப்படி வசூல்!




• ஆபத்து, அபத்தம்!

❑ ரூ. 50 பரிசு பெறுபவர்:
ஜி. ராமதாஸ்,
5/46, வீ.ஆர்.புரம்,
உள்ளிக்கடை போஸ்ட்,
அய்யம்பேட்டை வழி – 614202.

## நீங்கள் கேட்டவை – தராசு

**பீதியில் கோவைவாசிகள்!**

# கோவையைக் குறிவைத்த குண்டுகள்!

"கோவைக்குத்தான் குறிவைத்திருக்கிறார்கள். வண்டி, இரண்டு மணி நேரம் தாமதம். இங்கேயே வெடித்து விட்டது...!" என்றார்கள், கோவைவாசிகள்.

- எண் 6673, சென்னை -

கோவை 'சேரன்' இரவு 9.45க்குப் புறப்பட்டு அதிகாலை 5:10க்கு இலக்கை அடைய வேண்டியது. மழையின் காரணத்தால் லேட். ஈரோடு தாண்டி ஐ.டி.ஐ. அருகில் குண்டு வெடித்துச் சிதற, மாநிலமே ஸ்தம்பித்தது!

வெடித்த பெட்டி அன்ரிஸர்வ்ட் கம்பார்ட்மெண்ட். பின்பகுதி முழுக்க சேதம். கேரேஜ், வலுவான உள்பகுதி முழுக்க பிய்த்தெறியப்பட்டு குருவிக் கூடுபோல்... கடினமான இரும்புப் பிளேட்டுகள் கூட உருக்குலைந்து... இரும்பே அப்படி... மனிதர்கள்...? இருவர் மரணம்... ஐந்து பேர் படுகாயம்... பயணிகள் அலறல்!

''இவனுகளுக்கெல்லாம் என்னதான் ஆச்சு...?'' பதை பதைக்கும் மூதாட்டி. பரபரக்கும் இரயில்வே போலீஸ், ஆர்.டி.ஓ... கலெக்டர்... கமிஷனர்... டி.ஜி.பி... என அரண்டு ஓடி வந்தவர்கள் ஏரானம்!

பெட்டியின் கடைசிசீட் சுக்குநூறாக வெடித்துச் சிதறியுள்ள விதத்தைக்

• சேதம்...





• ராஜன் குட்டி



• செல்வக்குமார்



• ராமச்சந்திரன்

கவனித்தபொழுது, வண்டியின் சக்கரத்தைக் குறிவைத்ததாகப் படுகிறது என்றார்கள் அதிகாரிகள். இந்த ஐந்தாவது கம்பார்ட்மெண்ட் (மொத்தம் 13 கேரேஜ்) மட்டும் தடம் புரண்டிருந்தால் போதும். பின்னால் வரும் பெட்டிகளும் உருண்டு உயிர்ச்சேதம் நூற்றுக்கணக்கில் ஆகியிருக்கும். நடக்காதிருந்தது தெய்வாதீனமே என்கின்றனர் அதிகாரிகள்.

''அனாதரவாகக் கிடக்கும் பொருட்களை யாரும் தொட வேண்டாம்... அப்படி ஏதும் இருந்தா போலீஸுக்கு இன்ஃபார்ம் பண்ணச் சொல்லி நாங்க பயணிகளுக்கு எச்சரிக்கை செய்திட்டுதான் வருகிறோம்... அப்படியும் இப்படி நடந்திருக்கு... இதை எதுல ஃபிக்ஸ் பண்ணி எங்க வச்சிருந்தாங்கன்னு தெரியல. விசாரணை நடந்துட்டு வருது...!'' - என்றார் பாதிப்பைப் பார்வையிட்டுக் கொண்டிருந்த C.C.M. (Chief Commercial Manager, Palghat) ராஜன்குட்டி.

"மத, ஜாதிப் பெயரால் மதச்சார்புக் கட்சிகள், தமது அரசியல் வெறியினை இதன் மூலம் தணித்துக் கொண்டதாகவே எனக்குப் படுகிறது. இது தமிழகத்திலும் ஊடுருவி விட்டதுதான் மிகுந்த வருத்தத்தைத் தருகிறது. கோவையில் அடுத்தடுத்த கொலைகளும், வன்முறைகளும், இவ் வெடிகுண்டுச் சம்பவமும் அரசு உடனடியாக மதவாத அமைப்புகளைத் தடைசெய்ய வலியுறுத்துகிறது...!'' என்கிறார் ஈரோடு ரயில் நிலையம் எதிரிலேயே வசிக்கும் த.மா.கா மாநில இளைஞர் - மாணவரணிச் செயலாளர் செல்வக்குமார்.

• பார்வையிடும் அதிகாரிகள்

**கோ**வையைத் தாக்க வந்தது இந்த வெடிகுண்டு மட்டுந்தானா...? இதற்கு இரண்டு நாள் முன்பு உடுமலையில் 3 பேரை பலி கொண்ட வெடிகுண்டு, கோவை ஜி.எச்.க்கு அருகே - நூற்றுக்கணக்கானோர் வசிக்கும் அபார்ட்மெண்டுக்கு வைக்கப்பட்டு - தக்க சமயத்தில் கண்டுபிடிக்கப்பட்டு - செயலிழக்கச் செய்ய இயலாது மதுக்கரை மலையில் வெடிக்கச் செய்யப்பட்ட சக்திவாய்ந்த வெடிகுண்டு...

இதன் பின்னணியில் பாண்டியன் எக்ஸ்பிரஸ் (திருச்சியில்), கோவை போத்தனூர் வழி சென்ற ஆலப்புழை எக்ஸ்பிரஸ் குண்டு வெடிப்பு... உயிரிழப்புச் சம்பவங்கள்... கோவையை ரொம்பவுமே உலுக்கியுள்ளன!

மும்பை, டெல்லி, சென்னை என வந்த வெடிகுண்டு சம்பவங்களை வெறும் செவி வழிச் செய்தியாகக் கேட்டுக் கொண்டு தானுண்டு, தன் வேலையுண்டு என்றிருந்த கோவை மக்கள், இப்போது தங்கள் ஊருக்கும் இந்த வெடிகுண்டு கலாசாரம் பரவி விட்டது கண்டு அரண்டும் மிரண்டும் போயுள்ளதை உணர முடிந்தது.

**கோ**வையைத் தாக்க வந்த இந்த வெடிகுண்டுகளை ஆராய்ந்த ஜகன் எம். சேஷாத்திரி தலைமையில் இயங்கும் ஆய்வாளர் இராமச்சந்திரனை, கமிஷனர் அலுவலகத்தில் சந்தித்தோம். குண்டுகளின் வீரியம் பற்றிக் கேட்டபோது, "கோவை அபார்ட்மெண்டிலிருந்து நீக்கப்பட்ட குண்டு, மூன்று மெக்கானிசம் கொண்டது. அதில் செல்லும் ஒயர்களை இழுத்தாலும், அறுத்தாலும், ஸ்விட்ச்சை அழுத்தினாலும் வெடிக்கும். அதற்குத் தனியா ஒரு பிரஸ்ஸர் சுவிட்ச், 9 வோல்ட் பேட்டரி 2, 1.5 வோல்ட் பேட்டரி 2 இருந்தன. ஒரு அலுமினிய பாக்ஸ்ல மேல ஒப்பனா விட்டு 9 கண்டெய்னர்ஸ் (பிரிவுகள்) அமைச்சிருந்தாங்க. ஒரு கண்டெய்னர்ல ஒரு டெட்டனேட்டர் (வெடிக்கக்கூடிய பொருள்) வைத்து ஒட்டுகிற டேப்பால் பாக் செய்து விட்டனர். பேக்கிங் பிரிச்சா, போச்சு. விவரம் தெரியாதவங்க, குழந்தைக தொட்டிருந்தாலும் கதை முடிஞ்சிருக்கும். எங்கிட்டேயிருந்த சக்திவாய்ந்த சாதனங்களைப் பயன்படுத்தி அதோட பவர் ஆன் ஆகாம



• ஹெச். ராஜா

# பாகிஸ்தான் சதியா?

ஆலப்புழா எக்ஸ்பிரஸில் குண்டு வெடித்த இடத்தில் கண்டெடுக்கப்பட்ட துண்டுப் பிரசுரம், வெடிகுண்டு சம்பவத்துக்கு முஸ்லிம் தீவிரவாத அமைப்பு காரணமாகியிருக்குமோ என்ற சந்தேகத்தை எழுப்பியுள்ளது.

“சந்தேகமே வேண்டாம். முஸ்லிம் தீவிரவாத அமைப்புகளின் சதிதான் இது” என்கிறார்கள் த.நா. பாரதீய ஜனதா கட்சியின் மாநிலப் பொதுச் செயலாளர்களான எல். கணேசனும், ஹெச். ராஜாவும்.

“எந்த அடிப்படையில் இப்படிச் சொல்லுகிறீர்கள்?”

“பாபர் மசூதி இடிப்புக்குப் பழிவாங்கும் நடவடிக்கை இது என்று துண்டுப் பிரசுரம் போட்டு விட்டுச் சென்றது மட்டுமில்லை. இவர்களுக்கும், பாகிஸ்தானிய உளவு ஸ்தாபனமான ஐ.எஸ்.ஐக்கும் தொடர்பு இருப்பதாக நாங்கள் சந்தேகிக்கிறோம். உள்ளூர் தீவிரவாத அமைப்புகள் என்றால் ஜெலட்டின் குச்சிகள் கொண்ட நாட்டு வெடிகுண்டுகளையே பயன்படுத்தி இருப்பார்கள்.

ரயிலில் வெடித்த குண்டுகள் ஆர்.டி.எக்ஸ். ரகத்தைச் சேர்ந்தவை. இந்த ரக வெடிமருந்து இந்தியாவில் கிடையாது. அயல்நாடுகளிலிருந்துதான் வரவேண்டும். மும்பையில் நடந்த தொடர் குண்டுவெடிப்புகளுக்கும் ஆர்.டி.எக்ஸ்.தான் பயன்படுத்தப்பட்டது. மும்பையில் இப்போது செக்யூரிடி கெடுபிடிகள் அதிகரித்து விட்டது என்பதால், வெடிமருந்தையும், அபாயகரமான ஆயுதங்களையும் தமிழ்நாடு, கேரள கடற்கரைப் பகுதிகள் மூலம் கடத்திக் கொண்டு வருகிறார்கள். தமிழ்நாட்டில் தூத்துக்குடி, ராமநாதபுரம், சென்னை நகரங்கள் மூலமாகவும், கேரளத்தில் கோழிக்கோடு, கொல்லம், திருச்சூர் ஆகிய ஊர்கள் மூலமாவும் கடத்தல் ஜரூராய் நடக்கிறது.

“தமிழகத்தில் இயங்கும் தீவிரவாத அமைப்புகளுக்கும், பாகிஸ்தானின் ஐ.எஸ்.ஐ.க்கும் உள்ள தொடர்பு பற்றி தீவிரமான புலனாய்வு செய்வது அவசியம் என்று தமிழக முதல்வரிடம் வற்புறுத்தியுள்ளோம். எங்கள் எச்சரிக்கையை அரசு உதாசீனம் செய்யுமானால், தமிழகம் வேண்டத்தகாத விளைவுகளைப் பின்னாளில் சந்திக்க நேரிடும் என்பதில் சந்தேகம் இல்லை!” என்றார்கள்.

— நமது நிருபர்

ஆளில்லாத பிரதேசத்துல (மதுக்கரை மலை) வெடிக்கச் செய்தோம். இது மட்டும் குறித்த இடத்தில் வெடிச்சிருந்தா இரண்டு கிலோ மீட்டர் சுற்றளவு கடுமையா சேதப்பட்டிருக்கும்.

“உடுமலையில் வெடித்தது டைம்-பாம் வகைன்னு யூகிக்க முடியுதேயொழிய, உறுதியா இன்னும் சொல்ல முடியலை. வெடித்த விதம், கிடைச்ச பொருள் வச்சுத்தான் இந்த யூகமே. இதுவும் மேலே சொன்ன வெடிகுண்டும் வைத்திருந்த பை ஒரே மாதிரி ஒரே நிறத்தில் (கறுப்பு + சிவப்பு) இருந்தது.

“ஈரோடு ‘பாம்’மில் வாட்ச் இருந்ததை வச்சு அது டைம்-பாம்தான்னு உறுதிப்படுத்த முடிகிறது. கோவையை குறி வச்ச இந்த மூன்று பாம்களில் முதலாவது சீண்டினாலே வெடிக்கக் கூடியது. 2-ம், 3-ம் குறித்த நேரத்திற்கு வெடிப்பவை. மூன்றுமே, IED வகை. அதாவது பெயர் பெற்ற RDX உடன் ஜெலட்டின் ‘மிக்ஸிங்’ செய்யப்பட்டு சொந்தமாகத் தயாரித்தவை...” என்றார்.

கட்டுரை, படங்கள் :
**கா. சு. வேலாயுதன்**

## கதை - 1



# ஊடல் ஏனடி பெண்ணே?

இரவே விரைந்து வா! விசிலுடன் வீட்டினுள் நுழைந்தான் ஆனந்தன். மங்கும் மாலை. பொங்கும் இன்பம். திருமணமாகிச் சில நாட்களே ஆகி, இன்றுதான் அலுவலகம். அங்கிருந்து எப்போதடா விடுதலை என்றிருந்தது.

ஆனால் ஏனோ புது மனைவி ஆருயிர் சௌம்யா உர்ர்ரென்றிருந்தாள். ஏதோ ஊடல் என்று புரிந்து கொண்ட புன்னகையுடன் அம்மா கோவிலுக்குக் கிளம்பினாள்.

இயந்திரக் கதியில் காப்பி வந்தது. எட்ட இருந்தே தம்ளரை நீட்டினாள். அழகிய முகத்தில்தான் சிரிப்பு மிஸ்ஸிங். முப்பது நாட்கள் கூட இன்னமும் ஆகவில்லையே....

"உமா எங்கே?"

"எப்பவும் உங்க தங்கை ஞாபகம்தானா?" கோபத்துடன் வெடித்துவிட்டு பெட்ரூமிற்குள் புகுந்து கொண்டாள்.

பின்னாலேயே சென்று பின்புறமாக சௌம்யாவை அணைத்துக் கொண்டான் ஆனந்த். இன்னமும் இன்முகம் காணோம்!

"ஒன்றும் வேண்டாம்!"

"என் ராணிக்கு என்னடா கோபம்?"

"இந்தக் கொஞ்சலுக் குறைச்சலில்லை. உங்களுக்கு என் மீது ப்ரியமே இல்லை! பாசம் முழுகும் உங்க அருமைத் தங்கை மேலத்தான்."

"என்னடா சொல்றே?"

"கல்யாணமாகி இதுவரை எனக்கு எதுவும் வாங்கித் தரலை. ஆனால், அவ்வளவு அவசரமா நேத்திக்கு உங்க தங்கைக்குக் கொலுசு வாங்கிக்கிட்டு வந்தீங்க. என் ஞாபகமே உங்களுக்கு இல்லை."

"உளறாதே!" என்றவன், அவள் பட்டுக் கன்னத்தில் தாபமுடன் முத்தமிட்டுவிட்டு, "இந்த அன்புப் பரிசு உனக்குப் பிடிக்காதா? இது தங்குதடையில்லாமக் கிடைக்கத்தான் அவளுக்குக் கொலுசு!"

"என்ன சொல்றீங்க?"

"தங்கைக்கு ரெண்டுங்கெட்டான் வயசு. அவள் கால் கொலுசுச் சத்தம் நமக்கு எச்சரிக்கை மணி! புரியுதா?"

வாசலில் ஜல் ஜல் என்ற சிணுங்கல் ஒலித்தது. சரேலென்று விலகினார்கள்! ●

பத்மா ரவிசங்கர்

# உதவ மாட்டாயா அண்ணே?

நைந்த செருப்பை வராந்தாவில் உதறினான் கேசவன். கக்கத்தில் இருந்த மஞ்சள் துணிப் பை கைக்கு மாறியது. அதீதமாக முகம் மலர்ந்து, "அண்ணா!" என்று அழைத்தவாறு ஹாலுக்குள் பிரவேசித்தான்.

தினசரியிலிருந்து நிமிர்ந்த மூர்த்தி, "வாப்பா கேசவா!" என்றார்.

காப்பிக் கோப்பையுடன் உள்ளே வந்தாள் மீனாட்சி.

"உங்களுக்கு ஈடுஇணை இல்லை அண்ணி! தயாராக காப்பியோட வர்றீங்களே!"

"குழந்தைங்க நல்லாருக்காங்களா தம்பி?"

"சௌக்கியந்தான் அண்ணி. அப்பா மாதிரி அண்ணன் இருக்கிறப்போ எனக்கு என்ன குறை அண்ணி..."

மூர்த்தி, மீனாட்சியைப் பார்த்ததில் பொருள் பொதிந்திருந்தது.

"எப்பவும் அண்ணி காப்பி அமிர்தம்தான்!"

மீதக் காப்பியை உறிஞ்சிவிட்டு மஞ்சள் பையிலிருந்து கடலை உருண்டைப் பாக்கெட்டை எடுத்தான் கேசவன். "உங்களுக்குப் பிடிக்குமேன்னுதான்..."

"சைக்கிள்ல வந்தியா கேசவா?"

"இல்லைண்ணே. பஸ்தான். உடம்பு உபாதை ஏதுமில்லாம இருக்கீங்களாண்ணே?"

"எனக்கு என்ன... நல்லாத்தான் இருக்கேன்."

"எனக்குச் சதா உங்க நினைவுதான்."

"உனக்குப் பிடிச்சதா ஏதும் சமைக்கிறேன் தம்பி" என்று மீனாட்சி அகன்றாள்.

"அண்ணி வெறும் ரசம் வைச்சாலும் எட்டூருக்கு மணக்குமே! அவங்க கைப்பக்குவமே தனிதான்!"

சற்றே இடைவெளி விட்டு —

"பசங்களுக்கும் பெரியப்பான்னா உயிர்தான். உங்களைத்தான் உதாரணம் காட்டுவா அமுதா."

"ஐஸ் வெச்சது போதும் கேசவா. வந்த விஷயத்தைச் சொல்லுப்பா."

"அவ்வளவும் சத்தியம் அண்ணே!" என்றான் பதற்றமுடன். "உங்களை மாதிரி ஒரு உத்தமருக்குத் தம்பியா வந்து பிறந்தது பூர்வ ஜென்மப் புண்ணியந்தான்!"

மறுபடி பண உதவி கேட்க கேசவன் வந்திருக்கிறான் என்பது மூர்த்திக்குப் புரிந்துதானிருந்தது. பதிமூன்று வருடங்கள் கழித்துப் பிறந்தவன் கேசவன். சற்றுக் கஷ்ட ஜீவனம்தான் அவனுக்கு. கட்டுப்பாடற்று



"பெண்கள் கூட்டம் அலைமோதற மாதிரி நம்ம படத்துக்குத் தலைப்பு ஒண்ணு சொல்லுய்யா."

"ஒண்ணு எடுத்தா ஒண்ணு இலவசம்!"

— குடந்தை கே.ஆர். ரவிக்குமார்



வதவதவென்று வரிசையாக வாரிசுகள்.

கேசவன் தலைசொறிந்தவாறு, "உங்க அன்புத் தம்பி திரும்பவும் தொந்தரவு செய்யறான்னு நினைக்காதீங்க. பசங்களுக்கு ஸ்கூல் ஃபீஸ் கட்டணும். அமுதாவுக்கு வைத்தியச் செலவு வேற இருக்கு. ஒரு ஐயாயிரம் ரூபா கொடுத்து உதவுங்க அண்ணே."

"அடடா! நேத்துதான் ஒரு அவசரச் செலவு நேர்ந்ததுப்பா. கையில சல்லிக் காசில்லை கேசவா..." என்றார் நிதானமாக.

கேசவன் முகம் சுண்டைக்காயாகச் சுருங்கியது. கோபமுடன் எழுந்து கொண்டான்.

அவன் விறைப்பாக, "நான் வர்றேன். நீங்கதான் அண்ணே அண்ணேன்னு உருகிப் பாசத்தைப் பொழியறீங்கன்னு புறப்படும்போதே அமுதா சொன்னா. அண்ணன் தம்பியானாலும் வாயும் வயிறும் வேறு வேறுதான்னு நிரூபிச்சுட்டீங்கண்ணே. கலர் டீவி, ஃப்ரிட்ஜுன்னு வசதியாத்தானே இருக்கீங்க..."

மூர்த்தி முகம் சற்றும் மாறுதல் அடையாமல், "மீனாட்சி! அந்தக் கவரை எடுத்துக்கிட்டு வா!" என்றார்.

கவர் வந்தது. கேசவன் விழித்தான்.

"என்ன பார்க்கறே? கவர்ல நீ கேட்ட ஐயாயிரம் இருக்கு! கவர் மேல 'கேசவனுக்கு'ன்னு கூட எழுதி வெச்சிருக்கேன் பாரு. ஸ்கூல் பீஸ் டைம்னு எனக்கும் தெரியும்பா" வெறுமையாகச் சிரித்தார்.

"இப்போதைய உலகத்துல அவ்வளவுதாம்பா உறவு! ஒரு சின்ன சோதனை... சாயம் வெளுக்குது பாரு! பணத்துக்கு முன்னே எல்லாம் அடிபடுது பார்த்தியா...?"

கேசவன் தலைகுனிந்தான். ●

**பத்மா ரவிசங்கர்**

''பத்திரிகைகளுக்கு சமையல் குறிப்பு அனுப்பாதே. அனுப்பாதேன்னு அடிச்சுக்கிட்டேனே, கேட்டியா?''

''ஏன், இப்ப என்ன ஆயிடுச்சு?''

''வயத்து வலியிலே அவஸ்தைப் பட்டுக்கிட்டு வாசல்ல எட்டு பேர் வந்து நிக்கிறாங்க!''

– வி.எஸ். கணேசன்



துர்காவைத் தீர்த்து விடத் துல்லியமாகத் திட்டமிட்டிருந்தான் தேவன். பொறி வைத்துக் காத்திருக்கும் வேடன் அவன். இன்றுதான் அந்த அசுப யோக அசுப தினம்.

இருவரும் கொளத்தூருக்குக் கிளம்பிக் கொண்டிருந்தார்கள். அங்கே தேவனின் மாமனார் இல்லம். எதிர்பாராத இந்தத் திடீர் விசிட்டில் துர்கா முகத்தில் மகிழ்ச்சி வழிந்தது.

"ம்... சீக்கிரம் எல்லா ஜன்னல், கதவுகளையும் சாத்து துர்கா. எப்படா வீட்டைப் பூட்டுவாங்கன்னு திருடனுங்க காத்துக்கிட்டிருக்காங்க. சின்ன சந்தர்ப்பம் கூடத் தரக் கூடாது..."

சற்று நேரத்தில் ஒரு புதிய புடைவையில் அவன் முன் வந்து நின்றாள் துர்கா. மனதுக்குள் அருவையாக உணர்ந்தான் தேவன். ஒட்டடைக் குச்சிக்குப் புடைவை சுற்றிய மாதிரி....

"எப்படி இருக்குங்க?"

"சூப்பர்டா கண்ணு!" என்றான் கவர்ச்சியாகச் சிரித்தபடி.

துர்கா தைரியத்தை வரவழைத்துக் கொண்டு கேட்டாள். "ஏதோ அதிசயம்! சதா சிடுசிடுன்னு இருப்பீங்க... இன்னிக்கு ஒருமுறை கூட என்னைக் கோபிக்கலையே நீங்க! இந்த மாதிரி எப்பவும் அன்பா நீங்க நடந்துக்கணும்னு எவ்வளவு நாள் ஏங்கியிருப்பேன் தெரியுமா?"

"இனிமே இப்படித்தான் நடந்துப்பேன் துர்கா கண்ணு!" என்றான் கண்சிமிட்டியபடி. "ரெடியாயிட்டியாடா?"

துர்கா தலையசைத்தாள்.

"அப்ப வாசலுக்குப் போய் காத்திரும்மா. ஃபைனலா செக்கப் பண்ணிட்டு வந்துடறேன்."

அவள் அகன்றதும், வீட்டினுள் ஒருமுறை வளைய வந்தான் தேவன். கொல்லைக் கதவு, ஏனைய அனைத்து ஜன்னல்களும் சாத்தப்பட்டிருந்தன. வீடு, இறுக மூடிய பெட்டி மாதிரி கம்மென்றிருந்தது.

சமையல் அறையினுள் நுழைந்தான். பகலிலேயே அந்த அறையில் அரை இருள்தான். தற்சமயம் ஜன்னல்களும் மூடிய நிலையில், முழுமை இருளில் மூழ்கியிருந்தது கிச்சன். மின் விளக்கை ஆன் செய்தான்.

பழைய வீடு. பாடாவதி ஸ்விட்சுகள். ஒயர்களும் புராதனம்தான். ஒவ்வொரு முறை தொட்டு ஆன்-ஆஃப் செய்யும் போதும் சிறு நெருப்புப் பொறிகள் உத்திரவாதம். இருப்பினும், எதையும் சான்ஸிற்கு விடாமல் பக்காவாக்க விரும்பினான்.

ஒரு ஸ்க்ரூ டிரைவர் கொண்டு ஸ்விட்சின் இரண்டு ஸ்க்ரூக்களையும் சன்னமாகத் தளர்த்தினான். லொடலொடத்து லூஸான ஸ்விட்சைத் திரும்பத் திரும்ப ஆன் செய்து, ஆஃப் செய்து பார்த்தான். மின்சாரம் சட்டென்று தொடர்பு பெறும் ஒவ்வொரு தடவையும் பளிச் பளிச்சென்று ஸ்பார்க் வருவதைப் புன்னகையுடன் பார்த்தான் தேவன். திருப்தியானான்.

அடுத்து, குனிந்து காஸ் சிலிண்டரின் வால்வ் குமிழைத் திருகித் திறந்து விட்டான். மேடை மேலிருந்த அடுப்பில் பர்னரையும் திறந்தான். இனி என்ன...? விடு ஜூட்தான்!

மின் விளக்கை அணைத்தான். சமையலறை வாசல் கதவையும் சாத்திவிட்டுக் கிளம்பினான்.

வழியில், தாராளமாகத் தின்பண்டங்கள் வாங்கினான். துர்காவிற்கு ஏராளமாகப் பூ வாங்கிக் கொடுத்தான். பூவும் பொட்டுமாகப் போய்ச் சேரட்டும் என்று எழுந்த நினைவில் பரவசமானான்.

மனைவி துர்காவுடன் மாமனார் வீட்டில் செமை சாப்பாடு. ஏகநாதர் லாஸ்ட் சப்பர் மாதிரி இவளுக்கு இது கடைசி விருந்து. பத்து பவுன் போடுவதற்கே சிங்கியடித்த மாமனார், எதிரில். எரிச்சலானான், உள்ளுக்குள். அழகில்லாத, படிப்பும் குறைவான, இந்த அசட்டுச் சனியன் துர்காவை இது வரை சகித்துக் கொண்டே சாதனை. இன்றோடு இவளைத் தலைமுழ்கி.

பத்மா ரவிசங்கர்

# உயிரை விடு என் கண்ணே!

ஒரு தவறைச் சரிசெய்யப் போகிறான் தேவன்...

தேவன் இன்னொரு திருமணத்திற்குத் தயாராகி விட்டான்.

அவனுக்குச் சேல்ஸ் ரெப் வேலை. காரைக்குடியில் ஒரு பணக்காரப் பறவை இவன் வலையில் விழுந்திருக்கிறது. கொஞ்ச நாள் 'துக்கம்' கொண்





''ஞாபகமறதியே எங்க தாத்தாவை கொன்னுட்டுது...''

''அப்படியா?''

''ஆமா, மூச்சு விடவே மறந்துட்டார்!''

— வெ. பொன் ராஜபாண்டி.



"நாடு ரொம்ப கெட்டுப் போச்சு!"

"எப்படிச் சொல்றீங்க?"

" 'ஏன் நாலு நாள் லீவு போட்டீங்க'ன்னு ஒரு ஸ்டாஃபைக் கேட்டா, 'நானே நாலு நாள் லஞ்சம் போச்சேங்கற வருத்தத்துல இருக்கேன்; நீங்க வேற என் மனசை புண்படுத்தாதீங்க'ன்னு சொல்றாரு!"

- பா. ஜெயக்குமார்.

டாடி விட்டு, அந்த அழகிய பெண்ணுடன் அங்கேயே சொர்க்கமாக செட்டிலாகிவிடத் திட்டமிட்டிருந்தான்.

மாமனார் முன்னிலையில், இயன்ற போதெல்லாம் மனைவியுடன் இழைந்தான்; சந்தோஷமாகக் காண்பித்துக் கொண்டான். விடைபெறுகையில் விழுந்து கும்பிட்ட மகள் தலை தொட்டு, ''தீர்க்கசுமங்கலியா இரும்மா!'' என்று பெற்றவர்கள் ஆசிர்வதிக்க, 'உடனே பலிக்கப் போகிறது!' என்று குதூகலித்தான்.

இருவரும் பல்லாவரம் திரும்பியபோது மாலை 5:00. வெடிக்கக் காத்திருந்த தன் வீட்டைப் பரவசமுடன் பார்த்தான் தேவன். 'விபத்து' என்ற போர்வையில் கொலையாகப் போகும் துர்காவைச் சலனமின்றிப் பார்த்தான், கடைசி முறையாக! 'குட் பை தரித்திரமே!' என்றான் மனதுக்குள்.

"இந்தா சாவி! தலைவலி பொளக்குது. சட்னு வீட்டைத் திறந்துக்கிட்டுச் சூடா காப்பி தயாரிச்சு வை. நான் போய் சிகரெட் வாங்கிக்கிட்டு இப்ப வந்துடறேன்" என்று சிடுசிடுத்து விட்டுத் தெருவில் இறங்கி விரைந்தான்.

தெருக் கோடியிலிருந்த பெட்டிக் கடையில் சிகரெட் வாங்கிக் கொண்டு நிதானமாகத் திரும்பி வந்தான் தேவன். ஒருமுறை சிகரெட் நெருப்பால் அவளைச் சுட்ட 'த்ரில்' நினைவு நிழலாட, முறுவலித்தான்.

திட்டப்பட்ட அவன் காதுகளுக்கு 'டொம்' என்ற சத்தம் ஏதும் கேட்காததில் வியந்தான். என்ன ஆயிற்று...

வீட்டின் வாசல் கதவு ஒருக்களித்திருந்தது. பதை பதைப்புடன் உள்ளே பிரவேசித்தான். காஸ் வாடை தாக்கியது. கர்ச்சீஃப் எடுத்து முகத்தில் கட்டிக் கொண்டான். இன்னமும் சாத்திய நிலையிலேயே ஜன்னல்களும், கொல்லைப்புறக் கதவும். துர்கா என்று அழைத்தான். சனியன் எங்கே போய்த் தொலைந்தது...

சமையல் அறைக்குள் சென்றான். மை இருட்டு. மூச்சு முட்டும் காஸ் நெடி. வியர்த்தான். கிச்சனின் ஒரு ஜன்னலை சற்றே திறந்தான். அதன் வெளிச்சத்தில் பார்த்தான். ஸ்விட்ச் ஆன் செய்துள்ள நிலையில் இருந்தது!

சட்டெனத் தேவனுக்குப் புரிந்தது. என்ன ஒரு அதிர்ஷ்டம்! மின்சாரம் இல்லாத போது துர்கா உள்ளே வந்து 'ஆன்' செய்திருக்கிறாள்! சரி. அடுப்பு பற்றவைக்க தீக்குச்சி கூடவா கிழிக்கவில்லை... அதற்காகத்தானே காப்பி கேட்டான்...! அசடு ஸ்விட்சை ஆன் செய்து விட்டு, அவசரமாக எங்கே சென்றிருக்கும்? 'கேஸ் லீக்' பற்றிச் சொல்லி உதவிக்கு எவரையேனும் அழைத்து வருகிறதா?

சரி. தான் இப்போது என்ன செய்வது என்று யோசித்தான். இனி, வேறு திட்டம். வேறு வழியில்தான் துர்கா தரித்திரத்தைத் தீர்க்க வேண்டும். அது அப்புறம். முதலில்... முதலில் சமையலறை ஸ்விட்சை ஆஃப் செய்ய வேண்டும். தேவன் அவசரமுடன் அணுகி ஸ்விட்சைத் தொடும்போது –

கோபக்கார கணவனுக்காகக் காப்பிப் பொடி கடன் வாங்கிக் கொண்டு, எதிர்சாரியில் மூன்றாம் வீட்டில் இருந்து துர்கா வெளிப்படும் போது –

மின்சாரம் வந்தது!

டொம்! ●



# "நாத்திகமும் ஆத்திகமும் பிரசாரத்துக்குரிய விஷயமே அல்ல!"

**இந்த மாதம் 19-ம் தேதியன்று 76-வது வயதில் அடியெடுத்து வைக்கிறார், கல்வியமைச்சர், பேராசிரியர் க. அன்பழகன். எதையும் ஆழ்ந்த சிந்தனையோடு பேசும் இவர், ஓர் அரசியல்வாதி என்பதை விட தமிழ் இனம், தமிழ் மொழி இவற்றைக் காக்கிற ஒரு போர்வீரன் என்பதிலேயே பெருமை கொள்வதாகக் கூறுகிறார்...**

**"நீங்கள் முதன் முதலில் பெரியாரிடம் எப்படி ஈர்க்கப்பட்டீர்கள்?"**

"தனிப்பட்ட முறையில் ஒருவரிடம் ஈர்ப்பு, நட்பு என்பதெல்லாம் எனக்கு எப்போதுமே இருந்ததில்லை. எல்லாமே கொள்கை அடிப் படையிலும் அவ்வப்போது செய்கிற பணி களின் சூழல் அடிப்படையிலும் ஏற்படுகிற வைதான். நான் ஏழெட்டு வயதாக இருக்கிற போது, என் மாமா மாயூரம் நடராஜன் அவர் கள் வீட்டில் தந்தை பெரியாரைச் சந்திக்கிற வாய்ப்புக் கிடைத்தது. அவரோடு உட்கார்ந்து சாப்பிடுகிற வாய்ப்பும் கிடைத்தது. அப்போது அவருடைய கருத்துக்களை முழுமையாகப் புரிந்து கொள்கிற வயது எனக்கு இல்லை யென்றாலும் கூட, ஜாதியில் ஏற்றத்தாழ்வு கிடையாது; தீண்டாதவர் என்று ஒதுக்கி வைப்பதெல்லாம் அக்கிரமம், அநியாயம் என்கிற உணர்வு எனக்கும் இருந்ததால், தந்தை பெரியாருடைய கருத்துக்கள் என்னை ஈர்த்தன. என் தந்தையார் எம். கல்யாண சுந்தரம் அவர்களும் சுயமரி யாதைக் கருத்துக்கள் கொண்டிருந் தவர் என்பதால் மனிதர் களில் உயர்வு, தாழ்வு கிடையாது; எல்லோரும் சமம் என்கிற உணர்வு என்னுள் இயல்பாகவே வளர்ந்து விட்டது. இந்தித் திணிப்பு கூடாது; அது தமிழ்க் கலாசாரத்துக்குக் கேடுதான் விளைவிக்கும் என்பதெல்லாம் என்னை மிகவும் ஈர்த்தன. பெரியாரின் கொள்கை களால்தான் எனது அரசியல் உணர்வு வளர்ந் தது. எனது பட்டப் படிப்பு முடிந்து - 44ல் நான் பச்சையப்பன் கல்லூரியில் ஆசிரிய ராகப் பணியாற்றியதால், பெரியாரின் தொண் டனாக - பிரசாரகனாக மட்டுமே என்னால் இருக்க முடிந்தது. கட்சியின் பொறுப்புகள் எதிலும் நான் இருக்கவில்லை."

**"அண்ணாவை எப்போது சந்தித்தீர்கள்? அவரால் எப்படி நீங்கள் ஈர்க்கப்பட்டீர் கள்?"**

"38-ல் மயிலாடுதுறையில் நடந்த இந்தி எதிர்ப்புக் கூட்டத்தில் அண்ணா பேசுகிற போதுதான் முதன் முதலாக அவரது பேச் சைக் கேட்டேன். பிறகு சிதம்பரம் பகுதிகளில் பொதுக் கூட்டம் பேச வருகிறபோதெல்லாம் அவ்வளவாக வசதியில்லாத என் வீட்டில் தான் மாலை வரை தங்கியிருந்து விட்டுப் பொதுக் கூட்டங்களுக்குப் பேசச் செல்வார்."

**"பெரியாருக்கும் அண்ணாவுக்கும் இடையிலான வித்தியாசம் எதையாவது உணர்ந்தீர்களா?"**

"கருத்துக்களை எடுத்துச் சொல்கிற முறை

யில் பெரும் வித்தியாசம் இருந்தது. பெரியார் தமது கருத்துக்களைச் சொல்வதில்தான் குறியாக இருப்பார். கொள்கைகளைச் சொன்னால் போதும்; ஏற்றுக் கொள்பவர்கள் ஏற்றுக் கொள்ளட்டும் என்கிற ரீதியில்தான் அவரது எண்ணம் இருந்தது. ஆனால் அண்ணா அப்படி இல்லை. ஜனநாயக முறை இடம்பெற வேண்டுமானால் 'நான்' என்ற கருத்துக் கூடாது; 'நாம்' என்ற கருத்துத்தான் இருக்க வேண்டும் என்று செயல்பட்டார். தமது சீர்திருத்தக் கருத்துக்களில் பெரும்பாலானவர்களுக்கு உடன்பாடு ஏற்படச் செய்ய வேண்டும் என்று அண்ணா விரும்பினார். நாத்திகத்தைச் சொல்லித்தான் சமூக சீர்திருத்தங்களைச் செய்ய முடியும் என்பதில் அண்ணாவுக்கு உடன்பாடு இல்லை.

"45-ல் மதுரையில் கறுப்புச் சட்டை மாநாடு நடந்தது. அது பிடிக்காதவர்களால், மாநாட்டுப் பந்தல் தீக்கிரையாக்கப்பட்டது. கறுப்புச் சட்டை அணிந்தவர்களெல்லாம் தாக்கப்பட்டார்கள். அதனால் திராவிடர் கழகத் தொண்டர் படையினர் மாத்திரம் கறுப்புச் சட்டை அணிந்தால் போதும்; உறுப்பினர்கள் அனைவருமே அணியத் தேவையில்லை என்று பெரியாரிடம் அண்ணா எடுத்துச் சொன்னார். ஆனால் பெரியார் அவர்கள் அதற்கு உடன்படவில்லை.

"ராமாயணம் எரிக்கப்பட வேண்டும் என்று பெரியார் சொன்ன போதும், கம்பரசம் மாதிரியான நூல்களின் மூலமும் நமது பிரசாரங்களின் மூலமும் ராமாயணம் பற்றி நமது கருத்துக்களை எடுத்துச் சொல்வதன் மூலமே மக்களைத் தெளிவடையச் செய்யலாம்; அதை எரிக்கத் தேவையில்லை என்கிற கருத்தையே அண்ணா கொண்டிருந்தார்.

"ஆனாலும் ராமாயணத்தை எரிப்பதற்காகச் சேலத்தில் பெரியார் நாள் குறித்துவிட்டதால் அதில் அண்ணா பேசினார். நாவலர் சோமசுந்தர பாரதியார் அவர்கள் ராமாயணத்தை எரிக்கக் கூடாது என்றும் அண்ணா அவர்கள் எரிக்க வேண்டும் என்றும் தங்கள் வாதங்களை எடுத்து வைத்துப் பேசினார்கள். சோமசுந்தர பாரதியார் சிறப்பாகப் பேசினார் என்றாலும் அண்ணாவின் பேச்சுத்தான் இளைஞர்களை உணர்வுபூர்வமாகக் கவர்ந்தது. இந்த நிலையில் கோவையிலிருந்து சர். ஆர். கே. சண்முகம் அவர்கள் ராமாயணத்தை எரிக்க வேண்டாம் என்று தந்தியனுப்ப, பெரியார் எரிக்காமல் விட்டு விட்டார். அதிலும் அண்ணாவுக்கு வருத்தம்.

"சுதந்தர நாளைத் துக்க நாளாகக் கொண்டாட வேண்டும் என்று பெரியார் அறிவித்ததில் அண்ணாவுக்கு உடன்பாடில்லை. இப்படியொரு கருத்தைப் பெரியாருக்கு எதிராகச் சொல்வதால் கட்சியிலிருந்து தம்மை ஒதுக்கி வைத்தாலும் அதை ஏற்றுக் கொள்ளத் தயார் என்று அண்ணா அறிவித்தார்.

"பிறகு பெரியார் - மணியம்மையார் திருமணம். வயதானவர்கள் இளம்பெண்களை மணந்து கொள்வதைக் கண்டிக்கிற நமது இயக்கக் கருத்துக்களுக்கு இது முரண்பாடு என்பதால் எஸ். குருசாமி போன்றோரை அனுப்பி எடுத்துச் சொல்லிப் பார்த்தார். பெரியார் ஏற்கவில்லை. இப்படிப் பல காரணங்களால் அண்ணா அவர்கள் ஒதுங்கியிருந்தார்கள். என்னைப் போன்றோரும் ஒதுங்கியே இருந்தோம். பிறகுதான் தி.மு.க. பிறந்தது. அப்போது, பாரதிதாசன், எஸ். குருசாமி போன்றோர் தி.க.வின் அச்சகம், சொத்துக்கள் போன்றவற்றை நாம் கைப்பற்ற வேண்டும் என்று சொன்னதை அண்ணா ஏற்கவில்லை. கொள்கைகளைக் காப்பாற்றத்தான் கட்சியே தவிர, சொத்துக்களைக் கைப்பற்ற அல்ல என்று திட்டவட்டமாகச் சொல்லி விட்டார்."

**"அண்ணா அவர்கள் இறப்பதற்கு முன்பு கட்சி பற்றியும் அதன் பிற்காலம் பற்றி**



யும் ஏதாவது பேசியிருக்கிறாரா?"

"அப்படியெல்லாம் குறிப்பிட்டு அவர் பேசியதில்லை. என்றாலும் ஒவ்வொரு கால கட்டத்திலும் ஒவ்வொருவரைப் பற்றிப் பாராட்டு வார்த்தைகளைச் சொல்லியிருக்கிறார். அதுவே இயக்கத்தில் மெல்ல மெல்ல நிலைகொண்டு விட்டது. அந்த அடிப்படையில் எந்தத் தியாகத்தையும் செய்யக்கூடியவர், தொண்டர்களைத் திறமையாக வழிநடத்தக் கூடியவர் கலைஞர் என்கிற எண்ணம் அனைவருக்கும் வந்து விட்டது. இதற்கு நாவலரைப் புறக்கணித்து விட்டார்கள் என்று அர்த்தமல்ல; கலைஞரின் மேல் இயல்பானதொரு நம்பிக்கை வளர்ந்து விட்டது என்றே அர்த்தம்."

**"சமுதாயச் சீர்திருத்தம், பகுத்தறிவுக் கொள்கைகள், இந்தி எதிர்ப்பு ஆகியவற்றில் நீங்கள் இருப்பது போன்ற மாறாத நிலைப்பாட்டிலேயே அனைவரும் இருக்கிறார்களா?"**

"ஒரே தியாகய்யர் கீர்த்தனையைப் பாடுகிற ஒவ்வொரு வித்வானும் ஒரே மாதிரியா பாடுகிறார்கள்? ஒவ்வொருவரும் ஒவ்வொரு மாதிரிதானே பாடுகிறார்கள். அதுபோலத்தான் இதுவும். அடிப்படையான கருத்துக்கள் மக்களிடம் போய்ச் சேர வேண்டும் என்கிற ஒரே நோக்கத்தில்தான் என்றாலும் அதைச் சொல்லுகிற பாங்கில் வித்தியாசங்கள் இருக்கத்தான் செய்யும். கலைஞர் எடுத்துச் சொல்லுகிற பாங்கு எனக்கு எப்படி இயல்பாக வரும்? ஆனாலும் அடிப்படைக் கருத்துக்கள் ஒன்றுதானே!

"என்னைப் பொறுத்தவரை தமிழன் என்கிற இன உணர்வு பட்டுப் போய் விடக் கூடாது. பிறமொழி ஆதிக்கம் இருக்கக் கூடாது. அதற்காக ஆங்கிலத்தைப் புறக்கணித்து விடக் கூடாது. அடுத்து, ஜாதி என்கிற உணர்வைக் கரைக்க வேண்டும். அது ஒரு கட்டி மாதிரி இன்றைக்கு வளர்ந்து விட்டது. அதை அறுவைச் சிகிச்சை என்கிற வன்முறையால் அகற்ற முடியாது. பொருளாதார ரீதியில் ஒரு சமத்துவ சமுதாயம் ஏற்படச் செய்வதன் மூலம் கொஞ்சம் கொஞ்சமாக அந்த உணர்வை அகற்றித் தமிழன் என்கிற ஒரே உணர்வின் அடிப்படையில் ஒன்றுபடச் செய்ய வேண்டும்.

"அப்புறம், பெரியார் ஊட்டிய பகுத்தறிவு - சுயமரியாதைச் சிந்தனைகள் சமூகத்தில் ஆழமாகப் பதியவேண்டும். பகுத்தறிவுக் கொள்கைக்கு மாறாகக் கடவுள் நம்பிக்கையைப் பயன்படுத்த இடம் இருந்து விடக் கூடாது. பகுத்தறிவுக் கொள்கையில் ஒரு முடிவு - கடவுள் இல்லை என்பது. இப்படி இல்லை என்று சொல்வதுதான் முடிவு என்று கருத வேண்டிய தேவையில்லை என்பதும் பகுத்தறிவுக் கொள்கைதான். பகுத்தறிவுக்கு மாறாகக் கடவுள் பெயரால் சொல்லப்பட்ட கருத்துக்கள் பல இருக்கின்றன. அதே சமயத்தில் பகுத்தறிவுக்கு உட்பட்ட பல கருத்துக்களும் கடவுள் பெயரால் சொல்லப்பட்டிருக்கின்றன. சாதாரண ஜாதி வித்தியாசங்களிலிருந்தே சிந்தித்துப் பார்த்து விடுபட முடியாத நிலையிலிருக்கிற மக்கள், காலங்காலமாக ஊறி வந்திருக்கிற கடவுள் நம்பிக்கை என்கிற உணர்விலிருந்து விடுபட்டுவிடுவார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. ஓர் எல்லை வரை சென்று கடவுளைப் பற்றிச் சிந்திப்பவர்கள் மிக மிகக் குறைவு. அப்படிச் சிந்திப்பவர்கள் கடவுள் உண்டு என்பதற்கும் இல்லை என்பதற்கும் வித்தியாசம் பார்ப்பதில்லை. இன்னும் சொல்லப் போனால் 'அதுவும் இதுவும் அதாவது கடவுளும் ஆத்மாவும் - வேறு வேறானது அல்ல' என்று அத்வைதம் சொன்ன ஆதிசங்கரர்தான் இந்து என்கிற வரிசையில் முதல் நாத்திகர்! வேதாந்தத்தின் எல்லைக்குப் போகிற போது, கடவுள் என்று தனிப்பொருள் எதுவும் இல்லை; எல்லா ஆத்மாக்களிலும் இறைவன் உறைகிறான் என்பதுதான்.



**"நீங்கள் பிரதமரா வர்றதுக்குக் கூட யோகம் அமோகமா இருக்குன்னு சொல்றேன். உங்கள் முகத்திலே சந்தோஷத்தையே காணோமே?"**

**"அந்த அல்பாயுசு பதவியை எத்தனை நாளைக்கு வகிக்கப்போறேனோன்னு நினைச்சா, சந்தோஷம் ஏதுங்க?"**

**-மல்லிகை மன்னன்**

"இப்படி அறிவுபூர்வமாகச் சிந்தித்து வாழ எல்லோராலும் முடியாது. மனிதன் உணர்வு பூர்வமாகத்தான் வாழ்கிறான். அதனால் அவனுக்கு இயல்பாகவே பலவீனங்கள் இருக்கத்தான் செய்யும். இந்த பலவீனம் காரணமாகத்தான் கடவுளை ஓர் உருவமாகக் கற்பனை செய்து நம்பத் தொடங்குகிறான். ஆக, இன்றைய மனிதன் கடவுளை நம்புகிறானா இல்லையா என்பதல்ல பிரச்னை. கடவுளின் பெயரால் சமூகத்தில் அக்கிரமம் நடைபெறக் கூடாது என்பதுதான் பகுத்தறிவுச் சிந்தனை. மனிதனின் எண்ணப் போக்கில் மாற்றங்கள் வரத் தடையாய் இருக்கிற - மனித நேயத்துக்குத் தடையாய் இருக்கிற - மானுட உரிமைகளைக் காப்பதற்குக் குந்தகமாய் இருக்கிற எண்ணப் போக்குகளைப் புராண - இதிகாசங்களின் பெயராலும் மதங்களின் பெயராலும் கடவுளின் பெயராலும் மனதில் வளர்த்துக் கொண்டு விட்ட நிலையிலிருந்து மக்களை விடுவிப்பதுதான் பகுத்தறிவின் குறிக்கோளாக நான் உணர்ந்து கொண்டிருக்கிறேன்.

"கடவுள் நம்பிக்கை பற்றிக் கலைஞரிடம் கேட்டபோது கூட 'கடவுளை நான் நம்புகிறேனா இல்லையா என்பதல்ல பிரச்னை; கடவுள் என்னை நம்பும்படியாக நான் நடந்து கொள்கிறேனா இல்லையா என்பதுதான் பிரச்னை!' என்று அழகாகச் சொன்னார். தந்தை பெரியாரிடம், 'கடவுள் இல்லை என்று சொல்லுகிறீர்களே, திடீரென்று கடவுள் உங்கள் முன்னால் வந்தால் என்ன செய்வீர்கள்?' என்று கேட்டார்கள். உடனே அவர், 'கன்னத்தில் போட்டுக் கொண்டு, இதுவரை உங்களை இல்லேன்னு சொன்னது தப்புத்தான் சாமி. நான்தான் இப்படி முட்டாளா இருந்துட்டேன்னா, நீங்களுமா இப்படி முட்டாளா இருக்கணும்? முன்னாடியே நீங்க வந்து சொல்லிருந்தா இத்தனை வருஷமும் எனக்கு வீணாப் போயிருக்காதே! இனிமே நீங்க இருக்கீங்கன்னு பிரசாரம் செய்யறேன்னு சொல்லுவேன்!' என்று சொன்னார். எனவே, நாத்திகமா ஆத்திகமா என்பதல்ல பிரச்னை. அவரவரும் அனுமானிக்கிற கடவுள், அவர்களை நம்பும்படியான நேர்மையான வாழ்க்கையை வாழ்கிறார்களா என்பதுதான் கேள்வி. இன்னும் சொல்லப் போனால் நாத்திகமும் சரி, ஆத்திகமும் சரி பிரசாரத்துக்குரிய விஷயமே அல்ல. அவரவரும் சிந்தித்து உணர்கிற விஷயம்!"

**"கடவுள் வழிபாட்டைக் கண்டித்த திராவிட இயக்கம், மக்களை அதிலிருந்து திருப்பித் தனிமனித வழிபாட்டுக்கு வழிசெய்து விட்டது என்றும் ஒரு விமர்சனம் இருக்கிறது..."**



"டாக்டர்! நீங்க ஏற்கெனவே மிலிடெரி டாக்டராக இருந்திருக்கலாம்; அதுக்காக இப்படி துப்பாக்கி காட்டி பீஸ் கேட்கிறது சரியில்லே!"
- கிட்டு

"அது சரியானதல்ல. யாரும் வந்து தமது காலில் விழுவதை அண்ணா விரும்பியதில்லை. ஆனாலும் அண்ணா சமாதிக்குச் செல்பவர்கள் வழிபடத்தான் செய்கிறார்கள். காந்தி சமாதிக்குச் செல்பவர்களும் வழிபடுகிறார்கள். இதுவெல்லாம் தவறு என்று நாம் சொல்லிவிட முடியாது. மூடநம்பிக்கைகளோடு செய்கிற கடவுள் வழிபாட்டுக்கும், கொள்கைரீதியாகக் கவரப்பட்டு உணர்ந்து செய்கிற இதற்கும் நிறைய வித்தியாசம் இருக்கிறது. இன்னும் சொல்லப் போனால் 'மூடநம்பிக்கைகளிலிருந்து மக்களைத் திசை திருப்பி விடுகிற செயல்கள்தான் இவை."

**"உங்களைப் போன்றவர்கள் அந்தக் காலத்தில் கொள்கைரீதியாகக் கவரப்பட்டு இயக்கத்தில் சேர்ந்தீர்கள். ஆனால் இன்றைய இளைஞர்கள் அப்படியா சேருகிறார்கள்?"**

"அன்றைய நிலையையே வைத்து இன்றைக்கும் பார்க்கக் கூடாது. அன்றைய திராவிடர் இயக்கம் என்பது அரசியல் பொறுப்பு எதுவும் இல்லாமல் இருந்தது. தி.மு.க. அப்படியானது அல்ல. இதற்கு அரசியல் பொறுப்பு இருக்கிறது. அதனால்தான் பெரியாரைப் போல் அல்லாமல் அண்ணா எல்லோரையும் 'பேலன்ஸ்' செய்து போனார்."

**"அன்றைக்கிருந்த கொள்கைப் பிடிப்பு இன்றைய இளைஞர்களிடம் இருக்கிறதா?"**

"எல்லோருக்கும் எப்படி இருக்க முடியும்? வித்தியாசம் இருக்கத்தான் செய்யும். காந்தியின் காங்கிரஸ் நேரு காலத்தில் இல்லை. நேரு நம்பிய ஜனநாயகம் இந்திரா காந்தி காலத்தில்

இல்லை. இந்திரா காந்தி மக்களைப் பற்றி எண்ணிப் பார்த்ததில் நூறில் ஒரு பங்கு கூட ராஜீவ் காந்தி எண்ணிப் பார்க்கவில்லை. இத்தனை பேரையும் சேர்த்து விற்றவர்கள்தான் இன்றைக்குக் காங்கிரஸை நடத்திக் கொண்டிருக்கிறார்கள். எனவே, ஒவ்வொரு தலைமுறைக்கும் காலப்போக்கில் மாற்றங்கள் இருக்கத்தான் செய்யும். ராஜாஜி சிந்தித்துச் செயல்பட்ட மாதிரி இன்றைக்கு அவரைப் பின்பற்றுபவர்களால் செய்ய முடியுமா? முடியாது."

**"இதெல்லாம் ஒரு மாதிரி நீர்த்துப் போனதற்கான அடையாளம் என்று சொல்லலாமா?"**

"நீர்த்துப் போனாலும் அவ்வப்போது புதுப்பிக்கப்பட்டுக் கொண்டுவிடும். கவிஞர் என்பவர் எப்போதுமே கவிதையா பாடிக் கொண்டிருக்க முடியும்? சாதாரண நேரத்தில் நம்மைப் போல் பேசிக் கொண்டுதான் இருப்பார். எனவே, அடிப்படைக் கொள்கைகளைக் கைவிடாமல் இருக்கிறோமா என்றுதான் பார்க்க வேண்டும்."

**"இன்றைய அரசியல் கட்சிகளில் உடனடியாகத் தேவைப்படுவது ஊழலைச் சுத்திகரிக்கிற ஒரு செயல். அதற்கு என்ன செய்கிறீர்கள்?"**

"கொள்கை இருக்கிற கட்சிகளில் ஊழல் இருக்காது. அந்த வகையில் அன்றைக்கும் சரி இன்றைக்கும் சரி, கலைஞர் கருணாநிதி அவர்கள் ஊழல் செய்ய அனுமதித்தவரல்லர். அவரையும் மீறிச் சில நடக்கலாம். அப்படி நடக்கிறபோது உடனடியாக நடவடிக்கை எடுக்கிறவர். ஊழல் நடந்தது உண்மை; ஆனாலும் அதை நிரூபிக்க முடியாது என்ற நிலை வரும்போது, சம்பந்தப்பட்டவரை உடனடியாக விலகிக் கொள்ளச் செய்வார். காரணம், அவருக்குக் கொள்கைதான் முக்கியம். அவர் எல்லாத் துறைகளிலும் சாதனை செய்து விட்டார். அரசியலில் இனி அவர் அடைய வேண்டிய இலக்கு ஊழலில்லாத ஓர் அரசுதான். இதை அவர் தமது காலத்தில் செய்யவே நினைக்கிறார். இதற்கு அதிகாரிகளும் மற்றவர்களும் எந்த அளவுக்கு ஒத்துழைக்கிறார்கள் என்பதில் வேண்டுமானால் சந்தேகங்கள் இருக்கலாமே தவிர, கலைஞருடைய எண்ணத்தைப் பொறுத்தவரை எனக்குச் சந்தேகமே இல்லை."

**"மொழி, இனம் ஆகியவற்றைக் காப்பதற்கான பேச்சுக்களில்தான் நீங்கள் அதிக ஈடுபாடு காட்டுகிறீர்கள். 'இனமானக் காவலர்' என்றுதான் உங்களை அழைக்கிறார்கள். அரசியல்வாதி என்கிற அளவில் நீங்கள் பெருமைப்படுகிறீர்களா அல்லது இனமானக் காவலர் என்கிற அளவில் நீங்கள் பெருமைப்படுகிறீர்களா?"**

"இந்த உணர்வுகளுக்காகத்தான் நான் அரசியலிலேயே இருக்கிறேன். தி.மு.க.வில் அது இருக்கிறது. அதனால் அங்கே இருக்கிறேன். இந்த உணர்வுகளைத் தொடர்ந்து காப்பாற்றுகிற கட்சி தி.மு.க.தான். அதில் திறமையான தலைவர் கலைஞர்தான்."

**"இப்படி மொழி, இனம் இவற்றின் பெயரால் நீங்கள் மக்களைப் பிரிப்பதால் தான், அவர்கள் ஜாதிகள் என்கிற இன்னும் சிறு சிறு கூறுகளாகப் பிரிந்தே கிடக்கிறார்கள் என்று சொல்லலாமா?"**

"தவறு. மொழி, இனம் என்பது நமக்கு ஓர் அடையாளம் தருகிற ஒரு விஷயமே தவிர, மக்களைப் பிரிக்கிற விஷயமல்ல. இது இந்தியாவில் மட்டுமல்ல; உலகம் பூராவிலும் உள்ள ஓர் உணர்வு. இன்னும் சொல்லப் போனால் இது ஜாதி மதங்களைக் கடந்து மக்களை ஒன்றுசேர்க்கிற ஓர் உணர்வு."

**"எதிர்காலத்தின் நம்பிக்கை நட்சத்திரமாகத் தி.மு.க.வில் இளைஞர்கள் தெரிகிறார்களா?"**

"அது தானாக வரும்."

பேட்டி : **இளங்கோவன், ஸ்ரீநிவாசன்**



**"தலைவி உங்களை நாயைவிட கேவலமா மதிச்சும் நீங்க மறுபடியும் அவுங்ககூடவே போய்ச் சேர்ந்துட்டீங்களே?"**

**"வேற எந்த கட்சித் தலைவரும் என்னை அந்த அளவுக்குக்கூட மதிக்கலையே சார்!"**

**— சீர்காழி வி.ரேவதி**

# காதில் விழுந்தவை



***தேர்தல் வருகிறதல்லவா! கட்சி வட்டாரங்களில் கூட்டணி பற்றியும், யாருக்கு எவ்வளவு இடம் என்றும்தான் பேச்சுக்கள்.***

● திமுக - தமாகா. உறவில் சிறிது அபஸ்வரம் தட்டினாலும், இந்த பாராளுமன்றத் தேர்தலிலும் இணைந்து செயல்படுவது காலத்தின் கட்டாயம் என்று இரு கட்சித் தொண்டர்களும் ஒப்புக் கொள்கிறார்கள். ஆனால் சென்ற முறை போன்று 20 இடங்களை தி.மு.க. விட்டுக் கொடுக்காது என்றும் நிச்சயமாகச் சொல்கிறார்கள் த.மா.கா.வினர். கரூர், பொள்ளாச்சி, பழனி. ராமநாதபுரம், ஏன், மதுரையைக் கூட விட்டுக் கொடுக்க வேண்டிய நிலை வரலாமாம். இதற்கு இரண்டு காரணங்கள்.

1. தங்களை விட அதிக இடங்களில் தமாகா. போட்டியிடக் கூடாது என்று தி.மு.க. நினைப்பது.

2. இந்த முறை தி.மு.க. கூட்டணியில் சேர இருக்கும் மார்க்ஸிஸ்டுகளுக்கும் இடம் ஒதுக்க வேண்டும். ஜனதா தளமும் ஆர்.எம்.வீயின் எம்ஜி.ஆர் மன்றமும் கூடத் தங்களுக்கு ஒரு சீட் கொடுப்பார்கள் என்று நம்பிக்கையுடன் காத்து நிற்கின்றனவாம். கலைஞருடன் கை கோத்துக் கொள்ள பா.ம.க. துடித்தாலும், தி.மு.க. வட்டாரத்தில், இது பற்றி யாரும் உற்சாகம் காட்டவில்லை. பாண்டியையும் சேர்த்து 17:17:6 என்ற விகிதத்தில் (அதாவது தி.மு.க. 17, தமாகா. 17 மற்ற கூட்டணிக் கட்சிகளுக்கு 6 இடங்கள்) கடைசியாக முடிவெடுக்கப்படலாம் என்று சொல்லப்படுகிறது.

● திமுக. பாராளுமன்ற வேட்பாளர்களில் பல புது முகங்கள் இருக்க வாய்ப்புண்டாம். ஆனால் கலைஞரிடம் நெருக்கமாக இருப்பவர்கள் 'தற்போதைய ஆட்களையே போட்டு விடலாம்' என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். வட சென்னையில் சோமுவின் மகன் மாறனுக்கு வாய்ப்புக் கொடுக்க வேண்டும் என்று சிலர் சொன்னாலும், 'மிசா' கணேசனுக்கு வாய்ப்பு பிரகாசமாக இருப்பதாகக் கட்சி வட்டாரங்கள் சொல்கின்றன.

● எத்தனை இடங்கள் என்பது பற்றி 'அம்மா'வுடன், வை.கோ. பேசி முடிவெடுத்து விட்டாராம். 15 இடங்கள் கேட்டு, பத்து இடங்கள் தரப்படும் என்று உறுதியாகச் சொல்லப்பட்டிருக்கிறதாம். ஆனால் அ.தி.மு.க. வட்டாரங்களில் 'அதிக பட்சமாக ஏழு இடங்களுக்கு மேல், மதிமுகவுக்குக் கொடுக்கப்படமாட்டாது' என்று உறுதியாகச் சொல்கிறார்கள். "அதிகமான இடங்களைப் பெற்று வெற்றி பெற்றால்தான் டெல்லியில் எந்தக் கூட்டணி என்றாலும் செல்வாக்கைக் காட்ட முடியும்' என்பதால் இந்த முறை அம்மா மிகவும் தெளிவாகவே இருக்கிறாராம். கட்சியின் சில முக்கியஸ்தர்கள், 'நீங்களே பாராளுமன்றத்துக்குப் போட்டியிடலாம்; நாம் வெற்றி பெறும் இடங்களைப் பொறுத்து நீங்கள் பிரதமராவதற்குக் கூட வாய்ப்பு கிடைத்தாலும் கிடைக்கும்" என்று அம்மாவுக்குக் கொம்பு சீவி விட்டுக் கொண்டிருக்கிறார்களாம்.

● திருவிழாவில் தொலைந்து போன குழந்தை போல் தமிழ்நாடு காங்கிரஸ் இருக்கிறது. வேறு வழியின்றி கடைசியில் அ.தி.மு.க. கூட்டணி தான் கதி என்பது அதன் நிலை. ஆனால் அதிக பட்சமாக ஐந்து இடங்களுக்கு மேல் அதற்குக் கொடுக்க அ.தி.மு.க. தயாராக இல்லையாம்.

# 17:17:6

தங்கபாலுவுக்கு தர்மபுரி நிச்சயம் உண்டாம்.

● வளர்ப்பு மகனை நினைவு இருக்கிறதா? ஹபிபுல்லா சாலையில் உள்ள அவரது வீட்டில் தினசரி ஆலோசனை நடக்கிறது. "அண்ணே(!) தஞ்சாவூர் தொகுதியில் சுயேச்சையாக நில்லுங்கள்' என்று சுதாகரனுக்கு வேப்பிலை அடித்துக் கொண்டிருக்கிறார்களாம் சுற்றி இருப்பவர்கள்.

● இந்த நியூஸுக்கும் தேர்தலுக்கும் சம்பந்தம் இல்லை. வளர்ப்பு மகன் திருமணம் நடந்த இடத்தை ஒட்டி சமீபத்தில் புதுமனை புகு விழாவை நடத்தினார் ஒரு N.R.I. சென்னையில் 37 பேருக்குத்தான் அழைப்பு. பத்திரிகை ஆசிரியர்கள், பத்திரிகை அதிபர்கள், வர்த்தகப் புள்ளிகள், அரசியல் புரோக்கர்கள் என்று பல்வேறு தரப்பினர். அம்மாவை மறக்காத உயிர் இல்லையே!

— தில்லப்பா

# உணர்வுகள், உறவுகள்

காதல் என்பது என்ன? ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையில் ஏற்படுகிற இந்த உணர்வு அன்பு சம்பந்தப்பட்டதா அல்லது காமம் சம்பந்தப்பட்டதா?

முதலில் காதலுக்கும் காமத்துக்கும் உள்ள வேறுபாட்டைப் புரிந்து கொள்வது அவசியம். காதலும் காமமும் ஒரு கழியின் இரண்டு முனைகளைப் போல. இது ஒரு பக்கம்; அது ஒரு பக்கம் என்பதுதான் உண்மை! ஒரு பக்கம் இருப்பவர்கள் அடுத்தப் பக்கத்துக்குப் போகக் கூடாது என்பதும் இல்லை; போய்த்தான் தீர வேண்டும் என்கிற கட்டாயமும் இல்லை!

ஒரு சிலருக்கு மரபு ரீதியாகவே உடல் கவர்ச்சியில் தான் ஈடுபாடு இருக்கும். கட்டுப் போட்டாலும் காதல் வராது. நாம் கொஞ்சம் வெளிப்படையாகவே பேசிக் கொள்வோம் என்றால் ஒன்று சொல்கிறேன்.



பெண் பார்க்கும் படலத்தில் என்ன நடக்கிறது? சில நிமிடங்களே பையனும் பெண்ணும் பார்த்துக் கொள்கிறார்கள். உடனே பிடித்திருக்கிறது அல்லது இல்லை என்று சொல்லி விடுகிறார்கள். இந்த முடிவுக்கு எப்படி உடனடியாக வந்துவிட முடிகிறது என்று கேட்டால், விடை சுலபம். அதுதான் காமம். உடல் ரீதியாக ஏற்படுகிற பரஸ்பர ஈர்ப்பும் கிளர்ச்சியும் தான் இங்கே முன் நிற்கிறது; முடிவு சொல்கிறது. குடும்பப் பின்னணி, பொருளாதாரப் பின்னணி என்று பெற்றோர்கள் எத்தனையோ விஷயங்களுக்குப் பொருத்தம் பார்த்தாலும் சம்பந்தப்பட்ட இருவரைப் பொறுத்தவரை உடல் கவர்ச்சிதான் முன்னால் வந்து நிற்கிறது.

ஆணுக்கும் சரி, பெண்ணுக்கும் சரி. காமம் என்பது இயல்பானதுதான் என்றாலும், காதல் என்பது இதையெல்லாம் தாண்டிய ஒன்று என்பதுதான் உண்மை. காமம் காரணமாகவே எழுகிற பிணைப்புக்கு வேறு எத்தனையோ பேர்களைச் சொல்லலாமே தவிர, அது காதல் ஆகாது.

இப்படிப்பட்ட திருமணங்கள் பிறகு கழியின் அடுத்த முனையான காதலுக்கு இட்டுச் செல்லக் கூடாது என்பதல்ல. அல்லது காலம் பூராவும் கழியின் அடுத்த முனைக்குச் செல்லாமலே இருந்து கொண்டிருக்கவும் செய்யலாம். எத்தனையோ ஆண்டுகளாக இப்படியே குடும்பம் நடத்திப்

பேரன், பேத்தியெல்லாம்கூட எடுக்கலாம்! இப்படி ஒருவரோடொருவர் சேர்ந்து வாழ்ந்து, சந்தோஷத்தையும் துக்கத்தையும் சமமாக அனுபவித்ததாலேயே ஒருவித ஈர்ப்பும் அந்நியோன்யமும் ஏற்படும். வயதான காலத்திலும் அவர்கள் சந்தோஷமாகவே இருப்பார்கள். இது மாதிரியான தம்பதிகளுக்கு இடையில் இருப்பது, அன்பு சம்பந்தப்பட்டதே தவிர, காதல் அல்ல!

அப்படியானால் காதல் என்பதுதான் என்ன? அதுவொரு மென்மையான உணர்வு. அதனால்தான் 'மலரினும் மெல்லியது காமம்' (வள்ளுவர் காலத்தில் காமம் என்றால் காதல் என்றுதான் அர்த்தம்) என்றார் வள்ளுவர்.

ஆணும் பெண்ணும் சேர்ந்து அனுபவிக்கும் இனிமையான கற்பனைகள்... தொடர்ந்து அவர்களை அந்த உணர்வு நிலையிலேயே இருக்கத் தூண்டும். அப்போது அவர்கள் இருவருமே ஒருவருக்கொருவர் எப்போதும் பக்கத்திலேயே இருக்க வேண்டுமென்று ஆசைப்படுவார்கள். ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டே இருப்பார்கள். அல்லது எதையாவது அர்த்தமின்றிப் பேசிக் கொண்டே இருப்பார்கள்!

# காதல் என்பது என்ன?

**டாக்டர் எஸ். விஜயகுமார்**

இது மாதிரியான நேரங்களில்தான், 'முகத்தில் முகம் பார்க்கலாம்; விரல் நகத்தில் பவழத்தின் நிறம் பார்க்கலாம்' என்றெல்லாம் வர்ணிக்கத் தோன்றும். கற்பனைகள் சிறகடித்துப் பறக்கும். இந்த மாதிரியான காதல் உணர்ச்சிகளுக்கு ஆளானவர்கள் கழியின் அடுத்த முனையான காமம் பற்றியெல்லாம் சிந்திக்கவே மாட்டார்கள். இது மாதிரியான காதல் உணர்வு பெற்றிருப்பவர்கள் ஒருவரையொருவர் தொட்டுக்கொள்ள வேண்டும் என்கிற அவசியமே இருக்காது. அவளைப் பார்த்துக் கொண்டிருந்தாலே பாட்டு வரும் அவனுக்கு. அவனைப் பார்த்துக் கொண்டிருந்தாலே பசியெடுக்காது அவளுக்கு!

டீன்-ஏஜில் உண்டாகும் ஈர்ப்பில் காதல் இருக்குமா? நிச்சயமாக அது நிஜமான காதல் உணர்வின் அடிப்படையில் உண்டாகிற ஈர்ப்பு அல்ல. அது முழுக்க முழுக்க உடல் கவர்ச்சியின் காரணமாகவே எழுகிறது.

இதன் காரணமாகத்தான் அந்த வயதில் யாரைப் பார்த்தாலும் அழகாகவே தெரிவார்கள். ஒருத்தி இல்லாவிட்டால் இன்னொருத்தி என்று சுலபமாக மனதை மாற்றிக் கொள்ள முடிகிறது. பழகிய யாரையும் மறந்து விடவும் முடிகிறது! ஆனால் நிஜமான காதல் உணர்வு கொண்டவர்களால் அப்படியெல்லாம் மாற்றிக் கொண்டு விட முடியாது. தங்களுடைய காதல் உணர்வுகளுக்கு முன்னால் பெற்றோர் என்கிற உறவு மட்டுமல்ல; இந்த உலகமே தூசு என்று நினைப்பார்கள்.

இப்படிக் காதல் உணர்வுகளை அனுபவித்தவர்கள் தாம் சாம்ராஜ்யத்தையெல்லாம் துறந்திருக்கிறார்கள். சில ஜோடிகள் தங்கள் உயிரையும் துறந்திருக்கிறார்கள்.

இவையெல்லாம் முடியாமல் போனவர்கள்கூட, எனது திருமணம் அவளோடுதான் அல்லது அவனோடு தான் இல்லையென்றால் திருமணமே வேண்டாம் என்று கடைசிவரை தனியாகவே வாழ்ந்திருக்கிறார்கள்; வாழ்ந்து கொண்டும் இருக்கிறார்கள்!

காதல் என்பது அன்புக்கும் மேலானது; காமத்தையும் கடந்தது என்றால் அப்படிப்பட்டதோர் உணர்ச்சியை நம்மில் எத்தனைபேர் அனுபவித்துக் கொண்டிருக்கிறோம் என்று யோசித்துப் பாருங்கள். பலரும் உதட்டைத்தான் பிதுக்க வேண்டியிருக்கும்! இப்படி உதட்டைப் பிதுக்க வேண்டிய அவசியமில்லாதவர்கள், நிஜமாகவே பாக்கியவான்கள்தாம்; அந்த ஆண்டவனாலேயே ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்தாம்!

# ஆஹா



ரொம்பப் புராதனமான தொடக்கம். ஒவ்வொரு பாத்திரத்தையும் உப்புசப்பின்றி அறிமுகப்படுத்துகிறது பின்னணிக்குரல். தொடர்ந்து மனத்தில் பதிய மறுக்கும் ஒரு பாட்டு (மற்ற பாடல்களும் இதே ரகம்தான்- தேவா.) என்றாலும் லேட் பிக்-அப்பை ஈடு செய்கிறது மிச்சப் பகுதி.

குடும்பத்தில் மற்றவர்கள் செய்யும் தவறுகளுக்கெல்லாம் தன் மீது பழிவிழ, 'உதவாக்கரை' என்று பலராலும் (முக்கியமாக அப்பா விஜயகுமாரால்) ஏசப்படும் கதாநாயகன், உண்மையில் தான் ரொம்பவும் உதவும் கரைதான் என்று நிரூபிப்பதே கதை. "சரியான வெட்டி" என்று நாமும்தான் அலுத்துக் கொள்கிறோம்- ராஜீவ் கிருஷ்ணா தோன்றும் முதல் பாதியில். என்றாலும் பிறகு அவர்தான் கதையின் சுமைதாங்கி.

மனைவி பானுப்ரியா இருக்க, சுகன்யா (சில காட்சிகள் என்றாலும் பளிச்)வுடன் தொடர்பு- எனினும் அதற்குக் காரணம் மனிதாபிமானம்- இப்படி ஒரு குழப்பமான நல்லவராகத் தோன்றும் ரகுவரன்.

கண்டிப்பான குடும்பத் தலைவராக - முக்கியமாக, மூத்த மகன் இறந்த செய்தியைத் தனக்குள் புதைத்துக் கொண்டு மகளுக்குத் திருமணம் செய்யும் காட்சியில்- விஜயகுமார்; சமையற்காரராக வந்து பின் விஜயகுமாரின் சம்பந்தியாகும் ரோஷக்கார டெல்லி கணேஷ்.

தனி ஆவர்த்தனத்திற்கு எந்தக் காட்சியும் அமையாவிட்டாலும் மொத்தத்தில் பாந்தமாகப் பொருந்தும் ஸ்ரீவித்யா- இப்படிப் பலரும் படம் ஜம்மென்று நகரத் தோள் கொடுக்கிறார்கள்.

கிரேஸி மோகனின் பங்கு நகைச்சுவை வட்டத்தைத் தாண்டியும் பரிமளிக்கிறது. ("காதல் தோல்வியடைஞ்சா பரவாயில்லே. ஆனா கல்யாண வாழ்க்கை ஒருபோதும் தோற்கக் கூடாது"). ஆள் மாறாட்டத்துக்கு ஸ்கோப் இல்லாத சோகத்தை, செவிட்டுத் தாத்தா, அழுக்கு எடுபிடி ஆகிய தனது நாடக ஸ்டாக் பாத்திரங்களின் மூலம் தணித்துக் கொண்டிருக்கிறார்.

இந்தப் படத்தில், சாயல்கள் இல்லாமல் தனித்துவம் காட்ட முயன்றிருக்கிறார் சுரேஷ் கிருஷ்ணா. அந்த வரைக்கும் ஓகே! ●

— ஜி.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621.
Annual Subscription : India : Rs. 208/-; Overseas : Rs. 1200/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 104/-; Overseas : Rs. 600/- (Air Mail)

தேர்ந்தெடுக்கப்பட்ட எழுத்துக்களுக்கு

# ரூபாய் ஐந்து லட்சம் மதிப்புள்ள உஜாலா பரிசுகள்

5 கலர் டிவி

இரண்டு நபருக்கு மோட்டார் சைக்கிள்

10 தங்க வளையல்கள் (1பவுன்)

250 மி. லி. கிங் சைஸ் ரூ. 3.16 ஆதாயம் !

10 நபர்களுக்கு ஒவ்வொருவருக்கும் ரூ. 1000/-

25 தங்க லாக்கட்கள் 1/2 பவுன்

200 நபர்களுக்கு ஒவ்வொருவருக்கும் ரூ. 500/-

400 நபர்களுக்கு ஒவ்வொருவருக்கும் ரூ. 250/-

UJALA

FOR SUPER WHITENESS OF CLOTHES

INSTANT ACTION LIQUID

## உங்களுடைய கருத்துக்களை எங்களுக்கு எழுதவும்

இப்போது உஜாலாவின் டாம்ப்பர் - புரூஃப் மூடியும், ஃபில்ஃபர் - புரூஃப் டிராப்பரும் ஜோதி ஆய்வுக்கூடத்தில் டிசைன் செய்யப்படுகின்றன. உங்களைப் பாதுகாக்க அவை எவ்வாறு வேலை செய்கின்றன ?

இன்று, தின் லேயர் க்ரோமெடோகிராஃபி (TLC) மற்றும் காஸ் க்ரோமெடோகிராஃபி மாஸ் ஸ்பெக்ட்ரோமெட்ரி (GCMS) பரிசோதனைகளில் முன்னேற்ற நாடான ஜெர்மனியில் தடை செய்யப்பட்டுள்ள அமின்ஸ் இல்லாத ஒயிட்னர் உஜாலா-வுக்கு சான்றிதழ் வழங்கப்பட்டிருக்கிறது. சருமத்தில் எரிச்சல் மற்றும் வாயில் பட்டால் விஷத் தீங்கு இல்லை என்று பரிசோதனையில் தெரிகிறது. மேலும் விஷத்தன்மையற்றது. அதோடு, உஜாலா பல இதர தனித்தன்மை வாய்ந்த குணங்களைக் கொண்டுள்ளது. அவை என்ன ?

உஜாலாவை உபயோகிப்பதற்கு சரியான முறை என்ன ?

விஞ்ஞான ரீதியற்ற ஒயிட்னர்களை நீண்ட நாட்களுக்கு உபயோகிப்பது ஆரோக்கியத்திற்கும், உடைகளுக்கும் நல்லதல்ல. ஆகவே அதுபோன்ற தயாரிப்புகளை உபயோகிக்கத் துவங்கியவர்கள் மீண்டும் உஜாலாவையே உபயோகிக்க ஆரம்பித்துவிட்டார்கள்.



Write to : **Jyothy Laboratories (UJALA)**, 2- A, Singarayar Mansion, AbhiramiAvenue, Meenambal Salai, K. Kannadasan Nagar, Madras - 600 118.

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 /97 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka

## இந்தியாவின் மிகப் பெரிய கடைகள்

# சரவணா ஸ்டோர்ஸ்

தங்கநகைகள் ✧ பட்டு ஜவுளிகள் ✧ பாத்திரங்கள்

ரெங்கநாதன் தெரு, தி.நகர், சென்னை-17.

**தங்க, வெள்ளி நகைகளுக்கு செய்கூலி இல்லை**

பழைய பொன் நகைகளை கொடுத்து புன்னகையோடு புதிய பொன் நகை பெறவும்.

22 ct. தங்கம்
1 கிராம் ரூ.411
(விலை மாற்றம் உண்டு)



நாங்கள் விற்கும் தங்க நகைகள் மற்ற எந்த கடைகளையும் விட உயர்வான தரம் என்று சவால் விட்டு உறுதி கூறுகிறோம்.

**பட்டு புடவைகளுக்கு 10% தள்ளுபடி**

ஜவுளிகள், ரெடிமேட் ஆடைகள், பாத்திரங்கள், டி.வி. ரேடியோ, ஃபிரிஜ், ஃபேன்

WE ACCEPT VISA, MASTER CARDS ONLY

ஞாயிறு விற்பனை உண்டு

L.R.SWAMI / P.P.